# விதுரநீதி.

இது

(மஹாபாரதத்திலிருந்தெடுத்து)

மதராஸ் திருவல்லிக்கேணி,

மத்வவிலாஸ புக்டிபோ ப்ரோப்ரைடர்

பண்டிட் டி. ஆர். கிருஷ்ணாசாரியரால்

மொழிபெயர்க்கப்பட்டு.

ஸ்ரீ உ. வே.

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரவர்களால்

பரிசோதிக்கப்பட்டது.

EDITED AND PUBLISHED

BY

**Pandit T. R. KRISHNACHARYA,**

PROPRIETOR, MADHVA VILAS BOOK DEPOT,

TRIPLICANE, MADRAS

# விஷய அட்டவணை.

# விதுர நீதி.

---

விதுரனது முற்பிறப்பு: ஆணிமாண்டவியர் சரித்திரம்.

**மா**ண்டவியர் என்று பிரசித்தரான ஒரு பிராமணர் இருந்தார். அவர், மிகவும் உறுதியுள்ளவர்: எல்லாத்தருமங்களையும் அறிந்தவர்; ஸத்தியந் தவறாதவர்; கடுந்தவம் செய்தவர். அவர், ஒருசமயத்தில், தீர்த்தயாத்திரைக்காகத் தேசமெல்லாம் சஞ்சரித்து, ஓரிடத்திற்கு வந்து பர்ணசாலையமைத்து, அதில் தவஞ்செய்துகொண்டு வசித்துவந்தார்.

சிலதிருடர்கள் இரவிலே அந்தப் பர்ணசாலையை அடுத்துள்ள பட்டணத்திற் போய்க் கொள்ளையடித்துவிட்டு, அந்த ரிஷியின் ஆச்சிரமத்தின் வழியாகச் சென்றார்கள். அப்பொழுது, ஊர்க்காவலாளிகளுக்கு அந்தச்சமாசாரம் தெரியவே, அவர்கள் திருடர்கள் போன வழியைத் தேடிக்கொண்டு வந்தார்கள். திருடர்கள், தங்களைக் காவலாளிகள் பிடிக்க வரும் ஆரவாரத்தைக் கேட்டு, சூனியமான ரிஷியின் ஆச்சிரமத்தில் ஒளிந்தார்கள்.

காவலாளிகள், அந்தஆச்சிரமத்திற்கு வந்து, ஒரு மரத்தினடியிலே இரண்டு கைகளையும் உயரத்தூக்கிக்கொண்டு யாருடனும் பேசாமல் தவஞ்செய்துகொண்டிருந்த மாண்டவியரிஷியைப் பார்த்தார்கள், "ஸ்வாமி! இந்த வழியாய் வந்த திருடர்கள் எந்தமார்க்கமாகப் போனார்கள்? அதைச் சொன்னால் அந்தமார்க்கமாய்ப் போய் நாங்கள் அவர்களைச் சீக்கிரம் பிடிப்போம்" என்று கேட்டார்கள். அந்தரிஷி ஸமாதியி.

லிருந்த படியால், அவர்களுடைய வார்த்தை அவர்காதில் விழவில்லை. ஆகையால், அதற்கு, அவர், யாதொருபதிலும் சொல்லவில்லை.

பிறகு, ராஜபுருஷர்கள் அங்கு மிங்குந் தேடும்பொழுது, ரிஷியினுடைய ஆச்சிரமத்திலேயே கையும் பொருளுமாகத் திருடர்கள் அகப்பட்டார்கள். ஊர்க்காவலாளிகள், ரிஷியின்மேலும் சந்தேகம் கொண்டு, திருடர்களுடன் அந்த ரிஷியையும் அரசனிடத்திற் கொண்டுபோய் விட்டார்கள். அரசன் எல்லோரையும் கழுவி லேற்றும்படி கட்டளையிட்டான்.வேலைக்காரர்களும் அப்படியே எல்லோரையும் கழுவி லேற்றினார்கள். கழுவேற்றப்பட்ட திருடர்களெல்லாம் சில நாள்களுக்குள் மரணமடைந்தார்கள்.

தருமாத்துமாவான மாண்டவியரிஷியோ, கழுவில் ஏற்றப்பட்டு அநேகநாள்கள் ஆகாரமில்லாமலே கழிந்தும், உயிரோடு தவஞ்செய்துகொண்டே யிருந்தார். அந்தச் சமாசாரத்தை ரிஷிகள் கேள்விப்பட்டு மிக்கவிசன மடைந்தார்கள். அவர்களிற் சிலர், பட்சிகளின்வடிவமெடுத்து இராத்திரிநேரத்தில் மாண்டவியரிஷியினிடத்திற்கு வந்து வேதாந்தபாடம் வாசித்துப் போகுபவ ராஞர்கள். அவர்களில் ஒருவர் "உமக்கு இந்தச் சிக்ஷை நேரிடும்படி என்ன காரணம்? அரசன் ஏன் இப்படித் தண்டனை விதித்தான்?" என்று கேட்டார் ; அதற்கு அவர், "நான் யார் மேலும் குற்றம் சொல்லமாட்டேன். என்னுடைய பாபந் தான் இதற்குக் காரணம்" என்று பதில் சொன்ஞர்.

இதை யெல்லாம் கேட்டிருந்த காவலாளிகள் அரசனிடத்தில் நடந்தபடி தெரிவிக்க, அவன் 'ஐயோ ! அபசாரம் நேரிட்டுவிட்டதே !' என்று நடுநடுங்கி மிகவும் மனத்திற் சங்கடப்பட்டு, பின்பு மந்திரிகளோடுகூட ரிஷியினி

டம் போய் ஸாஷ்டாங்கமாகச் சேவித்துக் மன்னிப்புக் கேட்கும்படி உறுதிகொண்டு, சூலத்தின்சமீபத்தில் வந்து மகரிஷியைக் கிட்டிநின்றான்; பிறகு, அவரைநோக்கி, "ஸ்வாமி! புத்திமோசத்தாலும் தெரியாமையாலும் நான் உமக்கு அபகாரஞ்செய்தேன். தாங்கள் என்மீது கோபம் கொள்ளக்கூடாது" என்று பிரார்த்தித்தான். பின்பு, ரிஷியைச் சூலத்திலிருந்து இறக்கிவிடும்படி வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டான். வேலைக்காரர்கள் அவரைச் சூலத்திலிருந்து இறக்கிவிட யத்தனித்தும் அது முடியாமற் போனபடியால், அவர்கள் அந்தக்கழுவின்நுனியைத் துண்டித்து அந்த மகரிஷியைக் கீழிறக்கிவிட்டார்கள். அந்தக்கழுநுனி ரிஷியின்ஆசனவாய்வழியாய் ஏறிக் கழுத்துக்குச் சமீபத்தில் விலாப்பக்கத்தில் வெளிப்பட்டிருந்தது. அந்த ரிஷி தமது விலாப்பக்கத்தில் வெளிப்பட்டுள்ள கழுவின்முனை புஷ்பக்குடலையை மாட்ட உபயோகப்படுமென்று எண்ணிச் சந்தோஷத்துடன் அதனோடு சஞ்சரித்துக்கொண்டிருந்தார். அவருக்கு அன்றுமுதல் ஆணிமாண்டவிய ரென்று பெயர் கிடைத்தது.

இப்படி யிருக்க, அவர் ஒருநாள் தமக்குச் சூலாரோபசிக்ஷை விதிக்கும்படியாக என்ன பாவம் சம்பவித்திருந்தது என்று உண்மை தெரிந்துகொள்ளும்பொருட்டு யமதருமராஜாவின் வீட்டிற்குச் சென்றார். ரிஷி அங்கே யமதேவனைக் கண்டு, "தருமராஜாவே! நான் என்ன பாவஞ்செய்தேன்? எதற்காக எனக்கு இந்தச் சிக்ஷை நேர்ந்தது? சீக்கிரம் சொல்லுக. எனக்கோ பாவம் செய்ததாக நினைவில்லை. என்னுடைய தவசின் பலத்தைப் பாரும்" என்றார். அதற்குத் தருமராஜன் மறுமொழி சொல்லுகிறான், "நீர் படித்துக்கொண்டிருக்கும்பொழுது, ஒரு ஈயினுடைய

பின்புறத்தில் ஈர்க்கினால் குத்தினீர். அந்தப்பாவகாரியத்தின்பயன்தான் இந்தச் சூலாரோபணம். கொடுத்தது சொற்ப மானாலும் தானத்திற்கு எப்படி அதிகம் புண்ணியமோ, அப்படியே சிறியபாவத்திற்கும் துக்கம் மிகுதியாகவிருக்கும்'' என்றான்.

ஆணிமாண்டவியர் சொல்லுகிறார்: ''அப்படி யானால், நான் பிறந்த பன்னிரண்டாவது வருஷத்தில் அந்தப் பாவ காரியம் செய்திருக்கவேண்டும். அது விவேகமில்லாத வயசு; ஆனபடியால், அந்தப் பாவம் என்னைச் சேராது. மேலும், நான் சொல்ப பாபம் செய்திருக்க, பெருத்த தண்டனையை எனக்கு எப்படி விதிக்கலாம்? எல்லாப் பிராணிகளுடைய வதையைக் காட்டிலும் பிராமணனுடைய வதம் மிகக் கொடுமையானது. விவேகமில்லாமல் எனக்குத் தண்டனை விதித்தபடியால், நீ மனுஷ்யலோகத்தில் சூத்திரஸ்திரீயின் வயிற்றிற் பிறக்கக்கடவாய். மேலும், நான் பாப புண்ணியத்தின் விஷயத்தில் ஒரு ஏற்பாடு செய்யப்போகிறேன்; கேள். ஒருவன் பதினாலுவயசு வரையிலும் செய்த பாபம் அவனுக்கு ஒட்டாது. அதற்குப் பிறகு செய்த பாவந்தான் அவனுக்குச் சேரும்'' என்று இப்படிச் சொல்லி ஆணிமாண்டவியரிஷி வந்துவிட்டார். இது இப்படியிருக்க.

## விதுரனது பிறப்பு.

பூலோகத்தில் சந்திரவம்சத்திலே சந்தனு என்று ஒருராஜா இருந்தான். அவனுடைய முதல் தாரத்துப் புத்திரன் பீஷ்மர். இரண்டாவது தாரமாகிய சத்தியவதியின் புத்திரன் விசித்திரவீரியன். அவனுக்குக் காசிராஜனுடைய புத்திரிகளாகிய அம்பிகை அம்பாலிகை என்ற இருவர்கள் பாரியைகளானார்கள். விசித்திரவீரியன், சிற்றின் பத்தில் மிகுதியாக ஆசை வைத்து அவ்விரண்டு ஸ்திரீக

னுடன் சுகம் அனுபவித்துக்கொண்டிருந்தமையால், அவ னுக்கு க்ஷயரோகம் நேரிட, அதனால் சிறுவயதிலேயே மரணமடைந்தான்.

அச்சமயத்தில் விசித்திரவீரியனுடைய தாயாகிய சத் தியவதி தன் வமிசம் அற்றுப்போய்விடு மென்று கண்டு, தனக்குப் பாலியத்திற் பிறந்த புத்திரனாகிய வியாசமஹா ரிஷியை வரவழைத்து, அவருடையகருணையால் தன் னுடையஇரண்டுமருமக்கள்மாரிடத்திலும் புத்திரோத்பத்தி செய்வித்தாள். அவ்விரண்டு புத்திரர்களில் அம்பிகையின் புத்திரனை திருதராஷ்டிரன் அந்தகனை படியினாலும், அம்பாலிகையின் புத்திரன் பாண்டுவான படியினாலும், மூன்றாவது புத்திரன் வமிசத்திற்கு இருக்கவேண்டியது அவசிய மென்று எண்ணி, சத்தியவதி, மறுபடியும் வியாச ரிடம்ஒருவரத்தைப் பிரார்த்தித்து, அவர் அனுமதியின்மேல் அம்பிகையின்மீது கருணைசெய்யும்படி அந்த வியாசரைக் கேட்டுக்கொண்டாள். அம்பிகையோ வியாசரிடத்துத் தான் போவதற்குப் பதிலாக, தன் வேலைக்காரியை நல்ல வஸ்திரங் களாலும் ஆபரணங்களாலும் அலங்கரித்து அனுப்பினாள். ரூபத்தில் அப்ஸரஸைப் போன்றவளும் மஹாபுத்திசாலியு மான அந்தவேலைக்காரி வியாசமஹாரிஷியின் மஹிமையை நன்றாய் அறிந்தவள். அவள் தன் யஜமானியாகிய அம்பிகை யின் சயனகிருஹத்தில் உத்தமமான படுக்கையில் வியாச ருடைய வரவை எதிர்பார்த்திருந்தாள். அவள் வியாசர் வருவதை அறிந்து எதிர்கொண்டுபோய் அழைத்து வந்து, நானாவித உபசாரங்களால் அவரைச் சந்தோஷப்படுத்தி னாள். அதனால் அதிகப்பிரீதி யடைந்த வியாசர், அவளைப் பார்த்து, "நீ இன்று முதல் வேலைக்காரி யல்லை; ராஜமாதா வைப்போ லிருப்பாய். உன்கர்ப்பத்தில் மகாபுத்திமானும் தரு

மாத்துமாவுமான புத்திரன் பிறக்கப் போகிறான்" என்று சொல்லி, தன்தாயாகிய சத்தியவதியினிடத்தில் வந்து, "அம்மா! உன் மருமகள் அம்பிகை தன் வேலைக்காரியை யனுப்பினாள். அவளுடைய வயிற்றில் மகாத்துமாவான புத்திரன் சூத்திரனாகப் பிறக்கப்போகிறான்" என்று சொன்னார். அப்பொழுது மறுபடியும் தன் மருமகளிடத்தில் மற்றொரு பிள்ளை பிறக்குமாறு கருணை செய்யும்பொருட்டுச் சத்தியவதி வியாசரைப் பிரார்த்திக்கும்படி எண்ணிய பொழுது; அதை யறிந்த ரிஷி, "உன் கட்டளைக்காக மூன்று தரம் வந்தேன். இனி என்னை நிர்ப்பந்தப் படுத்த வேண்டா" என்று சொல்லி மறைந்துவிட்டார்.

ஆணிமாண்டவியரிஷியினாற் சபிக்கப்பட்ட யமதருமராஜாதான், அந்தச் சூத்திரஸ்திரீயின் வயிற்றிற் பிறந்தான். அந்தக் குழந்தைக்கு விதுரன் என்று பெயரிட்டார்கள்; விதுரன் என்பதற்கு, ஞானி புத்திமான் என்று அர்த்தம். அந்தவிதுரர் சூத்திரஜன்மத்திற் பிறந்த போதிலும், நீதியில் மஹாநிபுணர், தருமிஷ்டர், விஷ்ணுபக்தி யுள்ளவர்; லோபம் குரோதம் முதலிய துர்க்குணங்கள் இல்லாதவர்; ஸகலப் பிராணிகளுக்கும் நன்மையைத் தேடுபவர்.

அந்த விதுரர், திருதராஷ்டிரனையும் பாண்டுவையும் தமையன்மா ராக எண்ணி, அவர்களின் இஷ்டப்படி நடந்து வந்தார். அவர்களும் விதுரரை எல்லாவிஷயத்திலும் தங்களுக்கு இளைய ஸகோதரராகவே எண்ணி ஸகல ஐசுவரியத்தாலும் விசுவாசமாய் நடத்தி வந்தார்கள்.

திருதராஷ்டிரனுக்கும் பாண்டுவுக்கும் விவாஹமான பிறகு, தேவகன் என்ற ராஜாவுக்குச் சூத்திரஸ்திரீயின் வயிற்றிற் பிறந்த மஹா ரூபவதியான ஒருகன்னிகையை விதுரர் விவாஹஞ் செய்துகொண்டார்.

### பாண்டவர் சரித்திரம்.

திருதராஷ்டிரனுக்குத் துரியோதனுதியரும், பாண்டுவுக்குத் தருமன் முதலியபாண்டவர் ஐவரும் பிறந்தார்கள். பாண்டு முன்னமே யிறந்துவிட்டதனுல் திருதராஷ்டிரனும் பாண்டவர்களும் வேறுபட, பாண்டவர்கள் வனவாசமும் அஞ்ஞாதவாசமும் செய்து வந்த பிறகும், விதுரர்க்குத் திருதராஷ்டிரனுடன் கூடவே இருக்கவேண்டியதாக நேரிட்டது. ஆனுலும், திருதராஷ்டிரனும் அவனுடைய பிள்ளைகளும் 'பாண்டவர்களுக்குப் பாகமில்லை' என்று சொன்னபோது, விதுரர் "நீங்கள் பாண்டவர்களுக்குப் பாதிராஜ்யம் கொடுக்கவேண்டியது நியாயம். அன்றியும் அவர்கள் பலசாலிகள்; மேலும், தருமிஷ்டர்கள்; ஈசுவரசகாய முள்ளவர்கள்; அவர்களுடன் நீங்கள் துவேஷம் செய்துகொண்டால், க்ஷேமமடையமாட்டீர்கள்" என்று தமையனுகிய திருதராஷ்டிரனுக்கும் அவன் புத்திரர்களுக்கும் புத்தி கூறினர். பல முறை என்ன சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை. பாண்டவர்கள் வனவாசமும் அஞ்ஞாதவாசமும் செய்து முடித்து உபப்பிலாவியம் என்னுமிடத்திலிருந்து கொண்டு, "எங்கள் பாகத்தை எங்களுக்குக் கொடுத்து விடுங்கள்" என்று பெரியதகப்பனுருக்குச் சொல்லியனுப்பினுர்கள். அதற்குத் திருதராஷ்டிரன் புத்திரர்களுடைய துர்ப்போதனையால் பாண்டவர்களுக்கு இராச்சியம் கொடுக்கச் சம்மதப்படவில்லை.

### ஸஞ்ஜயன் தூது.

திருதராஷ்டிரனுக்கு ஸஞ்ஜயன் என்று ஒரு சாரதி இருந்தான். அவன் விதுரரைப்போல மகாஞானியும் பகவானிடத்தில் பக்தியு முள்ளவன். அவனிடத்தில் திருதராஷ்டிரன் பாண்டவர்களுக்குச் சொல்லும்படி சமாதானவார்த்தை சொல்லி யனுப்பினுன்.

திருதராஷ்டிரனுடைய கட்டளையின்படி ஸஞ்ஜயன் பாஞ்சாலநகரத்திற்குச் சமீபத்தி லுள்ள உபப்பிலாவியம் என்ற இடத்திற்குப் போய்ப் பாண்டவர்களைக் கண்டான்; கண்டதும் அவன் தருமபுத்திரரிடத்து இவ்வாறு கூறலானான்:—"தருமபுத்திரா! அஜாதசத்ரு என்று கிடைத்த பெயர் உமக்கே தகும். உம்மேல் வீண்பகை பாராட்டுந் துரியோதனனைத் தவிர வேறுசத்துரு உமக்கு யாருமில்லை. பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஞ்ஞாதவாசமும் செய்து இவ்வளவுகஷ்டமும் அனுபவித்துப் பிராதாக்களுடனும் மகாபதிவிரதையான திரௌபதியுடனும் யாதொருகுறைவுமில்லாமல் நீர் க்ஷேமமாயிருப்பது, ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய அனுக்கிரகந்தான். அம்பிகையின் புத்திரரும் ராஜாவுமாகிய திருதராஷ்டிரர், நீரும் பீமசேனனும் அருச்சுனனும், நகுலஸஹதேவர்களும், வீரர்களுக்குப்பாரியையும் வீரபுத்திரர்களையுடையவளும் ராஜபுத்திரியுமான திரௌபதியும், இன்னும் உங்களுடைய சுற்றத்தார்களும் க்ஷேமமாயிருக்கிறீர்களா? என்றுகேட்கச் சொன்னார்" என்றான்.

யுதிஷ்டிரன், "ஸஞ்ஜயா! வா. நீ வந்ததனால் நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். நானும் என்னுடைய தம்பிகள் முதலானவர்கள் எல்லோரும் க்ஷேமமாயிருக்கிறோம். எங்களுக்கெல்லாம் பெரியோரான திருதராஷ்டிரர் க்ஷேமமாக இருக்கிறாரா? அவருடைய க்ஷேமசமாசாரம் கேட்டு வெகுநாள்கள் ஆயின. நீ அவருக்கு மிகவும் இஷ்டன்; உன்னைப் பார்த்ததனால், அவரைப் பார்த்ததாகவே நினைக்கிறேன். எங்களுடைய பாட்டனார் பீஷ்மர் மஹாபுத்திமான்; நல்லமனத்தை யுடையவர்; அவர் க்ஷேமமாக இருக்கிறாரா? திருதராஷ்டிரருடைய புத்

திரர்கள் க்ஷேமமாக இருக்கிறார்களா? எங்களுக்கெல்லாம் குருவான துரோணாசாரியரும் அவர்குமாரரான அசுவத்தாமாவும் கிருபாசாரியரும் க்ஷேமமாயிருக்கிறார்களா? திருதராஷ்டிரர் பிராமணர்களுக்குக் கொடுத்த மானியங்களைச் சரியாக நடத்துகிறாரா? பிராமணர்கள் ஏதேனும் குற்றஞ் செய்தால், அதைத் திருதராஷ்டிரரும் அவர்புத்திரர்களும் பொறுக்கிறார்களா? உங்களுக்கெல்லாம் சரியான சம்பளம் கொடுத்து வருகிறார்களா? அவர்களெல்லோரும் நான் என் பாகத்தைக் கேட்டு அனுப்பினதற்கு, எங்கள்மேல் குற்றம் நினைக்காமல் இருக்கிறார்களா? சிரஞ்சீவி அருச்சுனன் காண்டீவமென்னும் வில்லைக் கையி லெடுத்தால், யுத்தத்திலே யாரும் எதிரியாக நிற்கமாட்டா ரென்று அவர்களுக்குத் தெரியுமா? கையில் கதாயுதத்தை எடுத்துக் கொண்டு மதம்பிடித்த யானையைப்போல அசைந்தபடியே செல்லும் பீமசேனன் யுத்தகளத்திலே சிங்கம்போலக் கம்பீரமாகக் காலடி எடுத்துவைப்பான்; அதைத் துரியோதனாதியர் நினைக்கிறார்களா? நகுலஸஹதேவர்களுடைய சாமர்த்தியம் அவர்களுடையமனசுக்கு வந்திருக்கிறதா? துரியோதனன் முதலானவர்கள் வனத்திலிருக்கும் எங்களை அவமானப்படுத்தும் பொருட்டு,கோஷயாத்திரையென்று பொய்க்காரணம் வைத்துக்கொண்டு வந்திருந்தார்கள். அப்பொழுது, அங்கே சித்திரசேனன் என்னும் கந்தருவராஜன் துரியோதனனைப் பின்கட்டாகக் கட்டிக்கொண்டு போய்விட்டான். அச்சமயத்தில் துச்சாசனன் கர்ணன் ஜயத்திரதன் முதலியவர்கள் அந்தக்கந்தருவராஜனுடன் யுத்தஞ்செய்து தோல்வியடைந்து, 'எங்களையும் கட்டிக்கொண்டு போனால், என்னசெய்வோம்?' என்று பயந்து ஓடிப்போனார்கள். துரியோதனனுடைய பாரியையாகிய பானுமதி, எங்களிடத்தில்வந்து, 'மாங்கலிய

பிக்ஷை கொடுக்கவேணும்' என்று கேட்டாள். அப்பொழுது பீமசேனனும் அருச்சுனனும் என்னுடைய கட்டாயத்தின் மேல் கந்தருவராஜனுடன் யுத்தஞ்செய்து அவனை வென்று, தாங்களே துரியோதனனுடைய கட்டை அவிழ்த்துவிட்டார்கள். இது, அவர்களுடைய நினைவிற்கு வருகிறதா?" என்று வினவினர்.

ஸஞ்ஜயன் மறுமொழி சொல்லுகிறான்: "குந்திபுத்திரா! தருமராஜாவே! நீர் எவர்களுடைய க்ஷேமத்தை விசாரித்தீரோ, அவர்களெல்லோரும் க்ஷேமமாக இருக்கிறார்கள். அங்கே வயதுமுதிர்ந்தவர்களான அநேக ஸாதுக்கள் இருக்கிறார்கள்; அப்படியே பாபிகளும் இருக்கிறார்கள். துரியோதனன் பிராமணர்களுடைய ஜீவனத்தைச் சரியாக நடத்துகிறான். அவனிடத்தி லிருக்கிற பெரும்பிழை உங்களைத் துரோகஞ்செய்வது ஒன்றுதான். இந்தவிஷயத்தில் திருதராஷ்டிரர் மிகவும் விசனப்படுகிறார். அவர் பிராமணர்களை வரவழைத்து, 'பாண்டவர்களுக்கு ராஜ்யம் கொடுக்காமலிருப்பது, நியாயமா அநியாயமா?' என்று விசாரிக்க, அவர்கள் 'பாண்டவர்களுக்கு இராச்சியம் கொடாமலிருப்பது மித்திரத்துரோகமாம். அது எல்லாப் பாவங்களைக் காட்டிலும் மிகக்கொடுமையானது' என்று சொன்னதை அறிந்திருக்கிறார். யுதிஷ்டிரா! உங்களுக்கு யுத்தத்திலிருக்கும் விசித்திரமான சாமர்த்தியத்தைக் கௌரவர்கள் நன்றாய் அறிந்திருக்கிறார்கள். தோளின்மேல் கதையை வைத்துக்கொண்டிருக்கும் பீமசேனனுடைய ரூபமும் காண்டீவத்தைக் கையில் தரித்திருக்கும் அருச்சுனனுடைய ரூபமும் அவர்களுடைய கண்ணுக்கு எதிரிலேயே யிருக்கின்றன. இனி உம்முடைய பெரியதகப்பனார் திருதராஷ்டிரர் சொன்ன வார்த்தைகளை நீர் கேட்க; உம்முடைய தம்பிகளும், துருபதர் திருஷ்ட

த்யும்நன் முதலிய எல்லோரும் கேட்கட்டும்: நீங்கள் நல்ல குலத்திற் பிறந்தவர்கள்; கெட்டகாரியம் செய்யாதவர்கள்; பெருந்தன்மையுள்ளவர்கள்; அகாரியஞ் செய்வதில் வெட்க முள்ளவர்கள். நல்லது இன்னது, கெட்டது இன்னது என்று பகுத்து அறிந்தவர்கள்; ராஜ்யத்தில் பாகம் கிடைக்கவேண்டு மென்று நீங்கள் சொல்லியனுப்பினீர்கள். அது நியாயமோ அநியாயமோ, அது இருக்கட்டும். என் பிள்ளைகளுக்கு உங்களுக்குப் பாகங் கொடுப்பதில் இஷ்ட மில்லை: அதற்காக அவர்களுடன் நீங்கள் யுத்தஞ்செய்ய நிச்சயித்திருப்பதாகத் தெரியவருகிறது. யுத்தம் மகாகோர மான காரியம். அதனால்,வெண்மையான வஸ்திரத்திற்கறை பட்டாற்போல் உங்களுக்குப் பெரும்பழி யுண்டாகும். யுத்தத்தில் அநேக க்ஷத்திரியர்களுக்கு நாசம் ஏற்படும். எங்கள் கட்சியிலும் உங்கள் கட்சியிலும் இருப்பவர்கள் எல்லோரும், உங்களுக்கும் பந்துக்களாயும் மித்திரர்களாயும் இருக்கிறார்கள். அவர்களெல்லோரும் மாண்டுபோவது, உங்களுக்கு நன்மையல்ல. மேலும், யுத்தத்தில் உங்களுக்கே ஜய மென்ற நிச்சயமு மில்லை. சந்தேகமான காரியத்தைப் புத்திமான் செய்வானோ? நீங்கள் ஜவிர், கிருஷ்ணன், த்ருஷ்டத்யும்நன், ஸாத்யகி முதலானவர்களெதிரில் தேவேந்திரன்தான் வந்து நின்றான்; அவன் தான் ஜயிப்பானா? எங்களுடைய கட்சியில் துரியோதனன் முதலிய நூறு பிராதாக்கள் துரோணாசாரியர் பீஷ்மாசாரியர் அசுவத்தாமா சல்லியன் முதலானவர்களுடன் யுத்தஞ்செய்ய எவன்தான் துணிவன்? இவர்கள் எல்லோரையும்விட, கர்ணன் ஒருவனை ஜயிக்க எவரால் தான் முடியும்? நீங்கள் ஜயித்தாலும் தோற்றாலும் எவ்வித மான லாபமிருப்பதாகவும் எனக்குத் தோன்றவில்லை. பாண்டவர்களே! தருமத்துக்கு விரோதமான யுத்தத்தை

நீங்கள் தாழ்ந்த குலத்திற் பிறந்த நீசர்களைப்போலச் செய்ய லாமா? இதற்குக் கிருஷ்ணனும் துருபதரும் சம்மதப்பட லாமா? ஆகையால், நான் உங்களையும் கிருஷ்ணனையும் துருபதரையும் பிரார்த்திக்கிறேன்: ஜகத்துக்கெல்லாம் க்ஷேமம் எப்படி உண்டாகுமோ, அப்படிச் செய்யுங்கள். நீங்கள் யுத்தஞ் செய்யாமலிருப்பது தான் சரியென்று எனக்குத் தோன்றுகிறதென்று சொன்னார்" என்றான்.

யுதிஷ்டிரன் :—"ஸஞ்ஜயா! எங்கள் பெரிய தகப்ப னார் திருதராஷ்டிரர் சொன்ன வார்த்தையெல்லாம் சரி தான். யுத்தமென்பது மிகவும் கெட்டதுதான். ஆனால், யுத்தம் நேரிடும்படி செய்தவர் திருதராஷ்டிரர்தாம்; நான் அல்லேன். அவரும் சுபாவத்தில் நல்லவர்: ஆனால், கோபக் காரனும் பொறுமையுள்ளவனும் காரியாகாரியந்தெரியாத வனும் மித்திரத்துரோகியு மான துரியோதனனுடைய வார்த்தையைக் கேட்டுக்கொண்டு, அவனுடைய இஷ் டப்படி நடக்கிறார். என்னுடைய சிறிய தகப்பனாரும் மகா புத்திமானு மான விதுரர் சொன்ன வார்த்தைகள் அவரு டைய மனசக்கு எப்பொழுது வரவில்லையோ, அப்பொ ழுதே கௌரவர்களுக்கு நாசம் நேரிட்ட தென்பதை நினை. துச்சாசனன், சகுனி, ஸூதபுத்திரனான கர்ணன் இவர்கள் எப்பொழுது மந்திரிகளாக ஏற்பட்டார்களோ, அன்று முதல் கௌரவர்களுக்கு க்ஷேமம் ஏது? பெரிய இராஜ்யம் எதிரிகளில்லாமல் தன்கையில் இப்பொழுது இருப்பதால், அதைத் துரியோதனனே எப்போதும் ஏகசக்கரமாக ஆளுவா னென்று எண்ணுகிறார். இப்படி யெண்ணினால், எப்படி க்ஷேமம் கிடைக்கும்? தேரோட்டியின் புத்திரனா கிய கர்ணன் தான் அருச்சுனனை வெல்லலா மென்று எண் ணுகிறானே: கோஷயாத்திரையில் இவன் எங்கே போயிருந்

தான்? துரியோதனனை ஏன் மீட்க வரவில்லை. அருச்சுனன் காண்டீவத்தைக் கையில் வைத்துக்கொண்டு போர்க்கு வரும் வரையிலும், பீமசேனன் கதாயுதத்தை எடுத்துக் கொண்டு யுத்தத்திற்கு வரும் வரையிலும், துரியோதனன் ராஜ்யம் தன்னதென்றே நினைப்பான். ஸஞ்ஜயா! நாங்கள் அரக்குமாளிகை முதலியவைகளிலும் வனவாசத்திலும் அஞ்ஞாதவாசத்திலும் அனுபவித்த துக்கம் உனக்குத் தெரியுமா? நான் அதை யெல்லாம் மறந்து விடுகிறேன்; ஸமாதானத்தையும் அடைகிறேன். நான் இந்திரப்பிரஸ்தத்திலிருந்தபோது எவ்வளவு ராஜ்யம் எங்களுக்கு இருந்ததோ, அவ்வளவு ராஜ்யத்தை இப்பொழுது கொடுத்தாற் போதும்" என்று சொன்னான்.

அதைக்கேட்டு, ஸஞ்ஜயன், "தருமபுத்திரா! உன்னுடைய காரியங்களெல்லாம் தருமமாயும் உலகத்திற் பிரசித்திபெற்றதாயு மிருக்கின்றன. மனுஷ்யனுக்குக் கீர்த்தி தான் பெரியது. பிழைத்திருப்பது சாசுவதமல்ல. ஆகையால், கௌரவர்கள் இராஜ்யபாகம் கொடுக்கவில்லையென்ற கோபத்தால் யுத்தஞ்செய்து அவர்களைக் கொன்று விடாதே. அப்படிக் கொன்றால், உனக்கு மிக்க அபகீர்த்தி வரும். மனுஷ்யன் பிழைத்திருப்பது கொஞ்சகாலந் தான்; ஸுகமென்று தோன்றுகிறதுகூடத் துக்கந்தான். ஆகையால், சாசுவதமான கீர்த்தியைக் கெடுத்துக் கொள்ளாதே. நீங்கள் வேதாத்தியயனம் செய்திருக்கிறீர்கள். பிரமசரிய விரதம் முடித்திருக்கிறீர்கள்; வெகுகாலம் ஸுகமும் அனுபவித்திருக்கிறீர்கள்; பெரியோர்கள் புகழத்தகுந்த புண்ணியகாரியங்களைச் செய்திருக்கிறீர்கள்; ராஜஸூயம் அசுவமேதம் முதலிய யாகங்களையும் செய்திருக்கிறீர்கள். உங்களுக்கு ஆகவேண்டியது ஒன்றும் மிச்சமில்லை. ஆகை

யால், இன்னும் கொஞ்சகாலம் வனத்திலே வசித்து ஆயுசைக் கழிக்கலாம். உங்களுக்குப் பன்னிரண்டுவருஷம் வனவாசஞ் செய்து வழக்க மிருக்கிற படியினால், இனியும் வனவாசஞ்செய்வது கஷ்டமாகத் தோன்றுது. அல்லது, வனவாசம் வேண்டாமென்று தோன்றினால், விருஷ்ணிகள் அந்தகர்கள் இருக்குமிடத்தில்—அதாவது-மதுராபட்டணத்திலும் துவாரகாபட்டணத்திலும்—பிக்ஷைவாங்கிப் புஜித்தாலும் ஆயுசு கழியும். யுத்தஞ்செய்து அநேகசத்துருக்களைக் கொன்று இராச்சிய மடைவது, உங்களுக்கு நல்லதன்று. மேலும், நீங்கள் சுகமனுபவிக்க வேண்டிய காலத்தில்—அதாவது-பால்யத்தில்—வனவாஸஞ் செய்தீர்கள்; சொந்தஜனங்களை அதனால் ஆயாஸப்படுத்தினீர்கள்; சத்துருக்களுடைய பலத்தையும் விருத்தியாகும்படி செய்தீர்கள்; இப்பொழுது கிழத்தனத்தில் யுத்தஞ்செய்வது ஏன்? இராஜ்யம் வேணுமென்ற எண்ணம் முன்னமே யிருந்திருந்தால், அப்பொழுதே யுத்தஞ்செய்து துரியோதனனுடைய கருவத்தைப் போக்கடித்து, இராச்சியத்தை ஏன் அடைந்திருக்கக் கூடாது? பீமன், அருச்சுனன், கிருஷ்ணன் முதலானவர்களின் உதவி முன்பு இல்லாமற் போயிற்று? நீங்கள் யுத்தஞ்செய்தால், பீஷ்மர், துரோணர், அசுவத்தாமா, கிருபர், சல்லியன், கர்ணன், துரியோதனன் முதலானவர்களைக் கொன்றுவிட்டு, உங்களுக்கு என்ன சுகம் கிடைக்கப்போகிறது? பூமி முழுதும் உங்களுக்குக் கிடைத்தாலும், மரணமும் கிழத்தனமும் வராம லிருக்குமா? ஆகையால், யுத்தஞ் செய்யவேண்டாம். இப்படி உங்களுடைய பெரிய தகப்பனார் சொன்னார்" என்று தெரிவித்தான்.

யுதிஷ்டிரன், "ஸஞ்ஜயா! திருதராஷ்டிரர் சொன்னதெல்லாம் ஸத்தியந்தான். ஆனால், துரியோதனன் இராச்

சியம் கொடுக்காவிட்டால் நான் யுத்தஞ்செய்வது, தருமமா அதருமமா என்றறிந்து, நீ என்னை நிந்தை செய். க்ஷத்திரியனுக்குப் பிக்ஷைவாங்குவது ஆபத்துக் காலத்துத் தருமம்; யுத்தத்தில் சத்துருக்களை ஸம்ஹாரஞ் செய்து ராஜ்யம் பெறுவதுதான் ஸ்வதருமம். எங்கள் முன்னோர்கள் எந்த வழியிலே சென்றார்களோ, அந்த வழியில்தான் நான் போகிறேன். இந்தப் பூமியிலுள்ள எல்லாத்திரவியத்தையும் அடைவதாயிருந்தாலும், தேவலோகத்தை யாளுவதா யிருந்தாலும், பிரமலோகத்தையே பெறுவதாயிருந்தாலும், அவற்றையெல்லாம் அதருமத்தால் அடைய நான் விரும்பமாட்டேன். சகலதருமங்களையு மறிந்தவரும் நீதியில் தேர்ந்தவரும், பிராமணர்களைத் தெய்வமாகக் கொண்டாடுகிறவரும், மகாபலசாலியு மான இந்தக்கிருஷ்ணன் எனக்கும் துரியோதனனுக்கும் ஸமானமானவர். அவர் 'நான் செய்வது நியாயம், அநியாயம்' என்பதைச் சொல்லட்டும். அவர் சொல்லுவதை நான் மீறுகிறதில்லை'' என்று சொன்னான்.

அதைக்கேட்டு பகவான் ஸ்ரீகிருஷ்ணன் சொல்லுகிறார்: ''ஸஞ்ஜயா! பாண்டவர்கள் நாசத்தை யடையக் கூடாது. அவர்கள் இராச்சியத்தையும் அடையவேண்டும். அப்படியே, கௌரவர்களும் க்ஷேமமாக இருக்கவேண்டும். ஸஞ்ஜயா! ஸமாதானம் அடையுங்களென்று நான் நித்தியம் சொல்லுகிறேன். யுதிஷ்டிரருக்கும் இதுதான் விருப்பம். ஆனால், 'திருதராஷ்டிரரும் அவருடைய புத்திரர்களும் எங்களுடைய ராஜ்யத்திலும் பேராசைகொண்டிருப்பதால், சமாதான மாவது எளிதல்ல. கலகந்தான் விருத்தியாகும்' என்று யுதிஷ்டிரர் சொல்லுகிறார். யுதிஷ்டிரர் பிக்ஷை வாங்கிக்கொண்டிருந்தால் கலகம் நேரிடாதென்

ருலோ, பிச்சையெடுப்பது பிராமணனதுதொழிலே யன்றி க்ஷத்திரியனது தொழில் அன்று. பிராமணனுக்குத்தான் வேதாத்தியயநஞ் செய்வதும், அத்தியயநஞ் செய்விப்பதும், யாகஞ்செய்வதும், யாகஞ்செய்விப்பதும், கொடுப்பதும், கொடுப்பதைவாங்கிக்கொள்வதும் ஆகிய ஆறுதொழில்கள் ஏற்பட்டுள்ளன. க்ஷத்திரியனுக்கு அத்தியயநஞ்செய்வதும் யாகஞ்செய்வதும் தானமும் ஆகிய மூன்று கருமங்கள்தான் ஏற்பட்டுள்ளன; இவற்றைத் தவிர க்ஷத்திரியனுக்கு ப்ரஜைகளைப்பாதுகாத்தல் முக்கியதரும மாம். அதற்காக யுத்தத்திலே பிராணனையிழந்தாலும் இழக்கலாம். வைசியனுக்கும் க்ஷத்திரியனுக்குச் சொன்ன மூன்றுகருமங்கள் உண்டு. அவனுக்குப் பயிர்த்தொழில்செய்வதும் மாடுகளைக் காப்பாற்றுவதும் வியாபாரஞ்செய்வதும்கூட உண்டு: அன்றியும், அவன் பிராமணக்ஷத்திரியர்கட்குப் பிரியமானதைச் செய்யவேண்டும். சூத்திரன் வேதாத்தியயநமும் யாகமுஞ் செய்யக்கூடாது; பிராமணன் க்ஷத்திரியன் வைசியன் இவர்களுக்கு வந்தநமும் பணிவிடையும் செய்வது அவனுடைய கருமம். அவனுடைய தொழிலும் அதுதான். ராஜா நான்கு வர்ணங்களையும் *சமமாகக் காப்பாற்றவேண்டும். தங்கள் பொருளையாகிலும் பிறர்பொருளை யாகிலும் திருடுகிறவர்களைக் கொல்லவேண்டும். அதற்காகவே யுத்தமென்பது ஏற்பட்டது; அதற்காகத்தான் தநுசு பாணம் கவசம் கத்தி முதலிய ஆயுதங்களும் ஏற்பட்டிருக்கின்றன: திருடர்களையும் திருடர்களுக்கு உதவிசெய்கிறவர்களையும் வதஞ்செய்வது

---

* ஸமமென்றால் அவரவருக்குத் தக்கபடி என்று அர்த்தம்: மாதாவையும் பாரியையையும் ஸமமாய்நடத்துகிறானென்றால், மாதாவுக்குத் தான் வந்தனஞ்செய்வதும் பார்யையால் பணிவிடை செய்துகொள்வதுந்தான் ஸமத்துவம்.

அரசர்களுக்கு மிக்க புண்ணியமான செயல். இப்பொழுது கௌரவர்கள் அந்தத்திருட்டுக்காரியத்தைத்தான் செய்திருக்கிருர்கள். அவர்கள் பாண்டவர்களுடைய இராஜ்யத்தை அபகரிக்கக் காரணமென்ன? பலாத்காரமாக அபகரிப்பதும்,பாராமலிருக்கும்போது அபகரிப்பதும் இரண்டும் திருடுதான்; ஆகையால், அந்த அகாரியத்தைச் செய்த துரியோதனனையும் அவனுக்கு உதவியா யிருந்தவர்களையும் கொல்வது, யுதிஷ்டிரனுக்குத் தருமந்தான். கௌரவர்களுக்கு மரணகாலம் சமீபித்திருக்கிறபடியால்தான், இந்த அகாரியத்தைச் செய்தார்கள்; நல்லகுலத்திற்பிறந்தவரும் நல்லநடத்தையுடையவருமாகிய பாண்டவர்களின் பாரியையான திரௌபதி தீண்டக்கூடாதவளாக இருந்த காலத்தில் அவளைச் சபையில் துச்சாசனன் இழுத்து வந்தான்; குலத்துக்குத் தலைவர்களாகிய பீஷ்மாசாரியர் முதலியவர்கள் அவனைத் தடுக்காமல் உபேக்ஷை செய்தார்கள். அவள் அச்சபையில் தீனஸ்வரத்தோடு கதறினதற்கு, விதுரன் ஒருவன்தான் 'திரௌபதியைச் சபைக்கு அழைத்து அவமானஞ்செய்வது அதருமம்' என்று சொன்ஞன். அவனுடையவார்த்தையை எவரும் இலட்சியஞ் செய்யவில்லை. அச்சமயத்திலே,தேரோட்டியின் பிள்ளையான கர்ணன், 'திரௌபதி! உன்பதிகள் தோல்வியை அடைந்துவிட்டார்கள்; இனி அவர்கள் இல்லை; நீயோ இளம்பிராய முள்ளவள்; வேறு கணவனைத் தேடிக்கொள்' என்ருன். அந்தவசனம் அருச்சுனனுடைய இருதயத்திலே பாணம்போலப் பொத்தியிருக்கிறது. பாண்டவர்கள் கிருஷ்ணஜினத்தை யுடுத்த போது, துச்சாஸனன், 'எள்ளின்பதரைப் போன்ற பாண்டவர்கள் இனி எழுந்திருக்க முடியாத நரகத்தில் விழுந்து விட்டார்கள்' என்ருன். 'யுதிஷ்டிரரே! ஏன் ஆலோசிக்கிறீர்? இராஜ்யம்

போய்விட்டது; தம்பிகள் போய்விட்டார்கள்; திரௌபதி ஒருத்தி மிச்சமாக இருக்கிருள்; அவளைப் பந்தயம்வைத்துப் பாரும்' என்று சகுனி சொன்னான். ஸஞ்ஜய! இதெல்லாம் உனக்குத் தெரியுமல்லவா?

போனதெல்லாம் போகட்டும்; சூதாட்டத்து ஏற்பாட்டின்படி பாண்டவர்கள் வனவாஸ அஜ்ஞாத வாஸங்களைச் செய்து வந்த பிறகாவது அவர்களுடைய இராஜ்யத்தை அவர்களுக்குக் கொடுக்க லாமே; அதையும் செய்யாமல் துரியோதனுதியர் த்வேஷத்தை விருத்தி செய்கிருர்கள். இப்படியிருக்க, கௌரவர்களுக்கு எப்படி க்ஷேம முண்டாகும்? ஆனாலும், நான் அங்கே போய்ச் சமாதானஞ் செய்து பாண்டவர்களுக்கு அவர்களுடையபாகத்தை வாங்கிக் கொடுத்து, யமன்வாயிலே அகப்பட்ட கௌரவர்களை விடுவிப்பதற்கு என்னுற் கூடுமான வரையில் முயல்கிறேன். ஒருஸமயம் பலித்தால், எனக்குப் புண்ணியம் கிடைக்கும். நான் உங்களுடைய ஸபையில் ஒருவருக்கும் கெடுதியை யுண்டாக்காத தருமவார்த்தைகளைப் பேசப்போகிறேன் எல்லாரும் கேட்பீர்கள். பீமன் முதலான பாண்டவர்கள், துரியோதனன் முதலிய சத்துருக்களைக் கொன்றுவிட்டு, முன்பு அவர்கள் சொன்ன ஏச்சுவார்த்தைகளைத் தாம் ஏசிக் காட்டப்போகிருர்கள். நியாயமாகத் தங்களுடைய இராஜ்யத்தின்பொருட்டு யுத்தஞ்செய்யும் பாண்டவர்களுக்கு ஒரு ஸமயம் யுத்தத்தில் மரணம் நேரிட்டாலும் நல்லதுதான். இப்போது, பாண்டவர்கள் பாதிராஜ்யத்தை வாங்கிக் கொண்டு ஸமாதான மடைந்து திருதராஷ்டிரருக்குப் பணிவிடை செய்யவும், பாகங் கொடுக்காவிட்டால் யுத்தஞ் செய்து முழுராஜ்யத்தையு மடையவும் சித்தமாக இருக்கிருர்களென்று, ஸஞ்ஜயனே! திருதராஷ்டிரருக்குச் சொல்லு" என்று கிருஷ்ணபகவான் பேசி முடித்தார்.

பிறகு, யுதிஷ்டிரனும், "ஸஞ்ஜய! க்ஷேமமாய் ஊருக்குப் போய்ச் சேர். நீயும் விதுரரும்தான் எங்களுடைய இஷ்டர்கள். நீ சுத்தாத்துமா; மத்தியஸ்தன்; தூதனாக வந்திருக்கிறாய். திருதராஷ்டிரரிடத்தில் நடந்ததைத் தான் சொல்வாய். கெடுதலைச் சொல்லமாட்டாய். அங்கிருக்கும் பிராமணர்களுக்கும் ஸந்யாஸிகளுக்கும் என்னுடைய வந்தனத்தைச் சொல்லு. எங்களுக்குத் தனுர்வேதத்தை உபதேசித்த துரோணாசாரியருக்கு என்னுடைய நமஸ்காரத்தைச் சொல். அசுவத்தாமா, கிருபாசாரியர் இவர்களுக்கும் என் வந்தனஞ் சொல்லு. சூரத்தனம், பலம், நல்ல நடத்தை, தபஸ், புத்தி, தைரியம் முதலிய குணங்களுக்கு இருப்பிடமான பீஷ்மருக்கும் எங்கள் நமஸ்காரத்தைச் சொல்லு. நல்லமனசும் படிப்புமுடைய திருதராஷ்டிரருக்கும் எமது வந்தனஞ் சொல்லு. திருதராஷ்டிரருடைய முதற்புத்திரன் மந்தபுத்தி; மூர்க்கன்; கடடமுள்ளவன்; பாவி; உலகத்திலே கெட்டபெயர் எடுத்தவன்: அந்தத் துரியோதனனை நான் க்ஷேமம் கேட்டதாகச் சொல்லு. மற்ற பந்துக்களையும் பந்துஸ்திரீகளையும் பார்த்து, தக்கபடி வந்தனம் ஆசீர்வாதம் குசலம் இவற்றை நான் சொன்னதாகச் சொல்லு. மஹாபுத்திசாலியும் ஞானியுமான விதுரரை க்ஷேமம் விசாரித்ததாகச் சொல்; அவர் எங்களுக்குப் பிதா, குரு, எஜமானன், தாயார், சிநேகிதர்: எல்லாம் அவர் தான். துரியோதனன் முதலானவர்களுடைய பாரியைகளுக்கு என்னுடைய ஆசீர்வாதத்தைச் சொல்லு. அவர்களுடைய கன்னிகைகளுக்கு 'நீங்கள் பர்த்தாக்களுக்கு அனுகூலர்களாயும், பர்த்தாக்கள் உங்களுக்கு அனுகூலர்களாயும் ஆகக்கடவீர்' என்று நான் ஆசீர்வாதஞ்செய்ததாகச் சொல்லு. பட்டணத்து ஜநங்கள் எல்லோரையும் க்ஷேமம்

விசாரி. செவிடர், குருடர், நொண்டிகள், முடவர், ஏழைகள், ரோகிகள் ஆகிய எல்லோரையும் நான் விசாரித்ததாகச் சொல்லு. துரியோதனனிடத்து நான் சொன்னதாக இப்படிச் சொல்வாய்:—எங்களுக்கு இந்திரப்பிரஸ்தத்தைக் கொடுத்துவிடு; அல்லது, யுத்தமாவதுசெய். நீ எங்களுக்குச் செய்த ஒவ்வொரு அபராதத்தையும் நாங்கள் பொறுத்தோம். போனதெல்லாம் போகட்டும்: நாம் இனி ஒருவருக்கொருவர் பிரீதியாயிருப்போம்: ஸமாதானமடைவோம். எங்களுக்குச் சரிபாதிபாகங்கூடக் கொடுக்கவேண்டாம். ஐந்துஸஹோதரர்களுக்கும் ஐந்துகிராமங்களைக் கொடுத்துவிடு; நாங்கள் சமாதான மடைகிறோம். தம்பியும் தமையனும், தகப்பனும் புத்திரனும், ஸம்பந்திகளும் போர்க்களத்தில்இறந்துபடாமல் ஒருவரோடொருவர் சேர்ந்துவாழட்டும். நான் சமாதானத்திற்கும் யுத்தத்திற்கும் ஸித்தமாயிருக்கிறேன் என்று சொல்லு." என்றான்.

இப்படியே பாண்டவர்ஐவரும் தனித்தனி சொன்ன வார்த்தைகளையெல்லாம் கேட்டுக்கொண்டு, ஸஞ்ஜயன், எல்லாரிடத்திலும் விடைபெற்று, இரதத்தில் உட்கார்ந்து ஒரு பகல்நேரம் பிரயாணஞ்செய்து சாயங்காலத்தில் ஹஸ்திநா பட்டணத்தைச் சேர்ந்தான். ஸஞ்ஜயன், அங்கே அரண்மனையிற் பிரவேசித்து அந்தப்புரத்துவாசலில்நின்றுகொண்டு, "நான் வந்திருப்பதாக மஹாராஜாவுக்குச் சொல்லுக" என்று துவாரபாலகனுக்குத் தெரிவித்தான். துவாரபாலகன், உள்ளே போய், "மஹாராஜா! ஸஞ்ஜயர் பாண்டவர்களிடத்துக்குப் போய் வந்திருக்கிறார். தங்கள் ஸமயத்தை அறிய விரும்புகிறார்; தங்களைத் தரிசிக்கவேணுமென்பது, அவருடைய உத்தேசம்" என்றான். திருதராஷ்டிரன் "அவனுக்கு எப்பொழுதும் தடையில்லையென்றுசொல்" என்றான். அவனும் அவ்வாறே ஸஞ்ஜயனுக்குத்தெரிவித்தான்.

கட்டும் காவலுமாயிருக்கும் அரண்மனையின் நடுவிலே சுவர்ணாசநத்தில் உட்கார்ந்திருக்கும் திருதராஷ்டிரமஹாராஜாவைப்பார்த்து, ஸஞ்ஜயன், "நான்ஸஞ்ஜயன்: நமஸ்காரஞ் செய்கிறேன். பாண்டவர்களிடத்துக்குப் போய்வந்தேன். மிகவும் நல்ல மனசையுடைய யுதிஷ்டிரர் தங்களுக்கு வந்தனஞ் செய்து, க்ஷேமம் விசாரிக்கச்சொன்னார். அவர் தங்களுடைய புத்திரர்கள் சுற்றத்தார்கள் அமைச்சர்கள் வேலைக்காரர்கள் இவர்களுடைய க்ஷேமத்தையெல்லாம் விசாரிக்கச்சொன்னார்" என்றான். திருதராஷ்டிரன் "ஸஞ்ஜய! யுதிஷ்டிரன் க்ஷேமமாயிருக்கிறானா? நான் சந்தோஷமாய் உன்னைக் கேட்கிறேன்; ஸஞ்ஜய! அவன் பிராதாக்களுடனும், மந்திரிகளுடனும், புத்திரர்களுடனும் ஸுகமாகஇருக்கிறானா?"

ஸஞ்ஜயன்—"மகாராஜா! யுதிஷ்டிரர் எல்லாருடனும் க்ஷேமமாக இருக்கிறார். அவர் தமக்கு முன்னிருந்த ராஜ்ய பாகத்தை உம்மிடத்திலிருந்து அடைய விரும்புகிறார். அவர் தோஷமில்லாத தர்ம அர்த்த காரியங்களைச் செய்கிறவர்; நல்ல மனசும் ஆசாரமும் உள்ளவர்; பெரியோர்களிடத்திலிருந்து அநேகவிஷயங்களைக் கேட்டறிந்தவர்; தனத்தைக்காட்டிலும் தருமத்தை மேலாக எண்ணியிருக்கிறார்; தயை யென்பதையே முக்கிய தருமமாக வைத்திருக்கிறார். தருமத்துக்கு விரோதமான ஸுகத்தையும் இஷ்டர்களையும் அவர் விரும்புகிறதில்லை. அவருக்கு இவ்வளவு குணங்களிருந்தும் அவர் கஷ்டப்படுவதைப் பார்த்தால், தெய்வந்தான் மனுஷ்யத்தனத்தைக்காட்டிலும் மேலானதென்று எண்ணுகிறேன். ஸூத்ரதாரன் பொம்மைகளை ஆட்டுவதுபோல் ஈசுவரன் மனுஷ்யனை ஆட்டுகிறான். உங்களிடத்திலிருக்குந் தோஷங்களையும் அவரிடத்திலிருக்குங் குணங்களையும் பார்த்தால், உங்களைக் கொல்

லாமல் அவர் மன்னித்து விட்டிருக்கிறா ரென்று எண்ணு கிறேன். அவர் தோலை யுரித்த சர்ப்பம்போலப் பாவத்தை நீக்கிச் சுத்தமாக இருக்கிறார். நீர் செய்யும் காரியம், தருமத்துக்கும் அர்த்தத்துக்கும் விரோதமானது ; யோக்கியர்களுடைய வழியை விட்டு விலகியது. அதை எல்லாரும் நிந்திக்கிறார்கள். இன்னும் உமக்குப் பாவம் அதிகரிக்கப் போகிறது. உம்முடைய தோஷத்தால் கௌரவவமிசமே நாச மடையப்போகிறது. அதற்குக் காரணம் நீர் தான்: ஆனபடியால், பாவம் உம்மைத்தான் அடையும்; யுதிஷ்டிரருக்குப் பாவம் நேரிடாது. லோகத்தில் சாசுவதமான நிந்தை உமக்குக் கிடைக்கப்போகிறது. நம்மைப்போலிருக்கும் ஒருமனுஷ்யன்அருச்சுனன் இந்தத் தேஹத்தோடு தேவலோகம் போய், அஷ்டதிக்பாலகர்களிடத்து வரங்களை அடைந்து, வேடனுடைய உருவம் பூண்ட மகேசுவரனையும் சந்தோஷப்படுத்தி, பாசுபதாஸ்திரம் முதலான வித்தைகளையும் சம்பாதித்துத் திரும்பி வந்திருக்கிறானே! இதைக் காட்டிலும் அவர்களுடைய மேன்மையை என்ன சொல்ல வேண்டும் ? நான் அதிகம் சிரமப்பட்டிருக்கிறேன். இரதத்தின் வேகத்தால் என்தேகமெல்லாம் வலிக்கிறது. மஹாராஜா! உத்திரவு கொடும் ; போஜனஞ்செய்து படுக்கிறேன். நாளைத்தினம் சபையில் கௌரவர்கள் எல்லோருடைய எதிரிலும், யுதிஷ்டிரர் சொன்ன வசனங்களைச் சொல்லுகிறேன்" என்றான்.

அதற்குத் திருதராஷ்டிரன் சொல்லுகிறான்: "ஸஞ்ஜய! போ: படுத்துத் தூங்கிச் சிரமபரிகாரஞ் செய்துகொள். யுதிஷ்டிரன் சொன்ன வார்த்தையை நாளைக்காலையில் சபையிலே எல்லாக் கௌரவர்களும் கேட்கும்போது சொல்லு" என்று உத்திரவு கொடுத்தான்.

ஸஞ்ஜயன் போனபிறகு, திருதராஷ்டிரனுக்குத் தூக்கம் வரவேயில்லை. ஆகையால், அவன், துவாரபாலகனைக் கூப்பிட்டு, 'விதுரனை யழைத்துவா' என்று அனுப்பினான்.

அவன், விதுரரிடத்திற் போய், "மஹாபுத்திசாலியே! மஹாராஜா உம்மைப் பார்க்க விரும்புகிறார்" என்று சொன்னான். விதுரர், உடனே புறப்பட்டு, அரண்மனைக்கு வந்து வாசலில் நின்றுகொண்டு, "நான் வந்திருப்பதைத் தலைமையருக்குத் தெரிவி" என்று துவாரபாலகனுக்குச் சொன்னார்.

அவன், உள்ளே போய், "மகாராஜா! விதுரர் தங்கள் திருவடிகளைத் தரிசிக்க வாசலில் வந்து காத்திருக்கிறார். அவர் என்ன செய்யட்டும்? எனக்கு உத்திரவு செய்க" என்றான்.

திருதராஷ்டிரன்:—"நீடித்த ஆலோசனையும் மஹாபுத்தியுமுடைய விதுரனைச் சீக்கிரம் அழைத்துவா. அவனைப் பார்க்கத் தகாத நேரம் எனக்கு எப்பொழுதும் இல்லையன்றோ" என்றான்.

துவாரபாலகன்:—"விதுரரே! புத்திசாலியான மஹாராஜாவின் அந்தப்புரத்திற் பிரவேசம் செய்யும். உம்மைப் பார்க்கத்தகாத சமயம் அவருக்கு எப்பொழுதும் இல்லையென்று எனக்குச் சொன்னார்" என்றான்.

பிறகு, விதுரர் அரண்மனையினுள்ளே புகுந்து கைகளைக் கூப்பிக்கொண்டு, ஏதோ ஆலோசனை செய்துகொண்டிருக்கும் ராஜாவைப் பார்த்து, "நான் விதுரன்: தங்கள் ஆக்கினைப்படி வந்திருக்கிறேன். நான், என்ன செய்யவேண்டும்? கட்டளையிடும்" என்றார்.

திருதராஷ்டிரன்:—"விதுர! ஸஞ்ஜயன் வந்தான். என்னை நிரம்பவும் நிந்தித்துப்போயினான். எவனுக்கு

உலகத்தில் சத்துருக்களே இல்லையோ, அந்தத் தருமன் எனக்குச் சொல்லி யனுப்பின வார்த்தையை அவன் நாளைத்தினம் சபைநடுவில் சொல்லப்போகிறானாம். குரு வமிசத்துக்குத் திலகம்போன்ற யுதிஷ்டிரனுடைய வார்த் தைகள் என்னமோ எனக்குத் தெரியவில்லையே! அது என் தேஹமெல்லாம் எரிக்கிறதே! தூக்கம் வரவில்லையே! என்ன செய்தால் எனக்கு க்ஷேமம் கிடைக்கும்? அதைச் சொல்லடா, விதுரா! தருமஅர்த்தங்களை நீ அறிந்தவன். ஸஞ்ஜயன் பாண்டவர்களிடமிருந்து வந்த நேரம் முதல் என் மனசுக்குச் சமாதானமே இல்லை. அவன் நாளை என்ன சொல்லப் போகிறானோ என்றே எனக்கு ஆலோசனையாக இருக்கிறது. விதுரா! யுதிஷ்டிரனுடைய அபிப்பிராயம் என்ன இருக்கும்? அதை நன்றாய்ச் சொல்லு. எப்படிச் செய்தால் நமக்கு க்ஷேமம் கிடைக்கும்? எல்லாப் பிரஜை களும் சுகமடைவார்கள்?" என்று விதுரனை வினவினான்.

விதுரர்:—"தனக்குச் சாதனங்களில்லாமலிருக்கும் போது பலவானுடன் பகைகொண்டவனுக்கும், எல்லாவற் றையும் பறிகொடுத்தவனுக்கும் பிறர்மனைவிமாரை விரும்பு கிறவனுக்கும் சோரனுக்கும் தூக்கம் வராது. மஹாரா ஜாவே! இந்தத் தோஷங்களில் யாதொன்றும் உம்மிடத்தில் இல்லையே? நீரோ பிறருடைய திரவியத்தை விரும்பி ஸந் தோஷப்படவில்லையே.

திருதராஷ்டிரன்:—"விதுர! எங்கள்வமிசத்தில் நீ ஒருவன்தான் புத்திமான். தருமத்தை யனுசரித்தும் க்ஷேமகரமாயு மிருக்கிற உன் வார்த்தையைக் கேட்க விரும்புகிறேன்: சொல்."

விதுரர்:—"அண்ணா! அரசர்க்கு உரிய சகல லக்ஷ ணங்களையு முடைய ராஜா எல்லாவுலகங்கட்கும் அதிபதியா

வான். அந்தலக்ஷணங்களையுடையவர் யுதிஷ்டிரர்; அவரை நீர் அருகே வைத்துக்கொண்டு காப்பாற்ற வேண்டியதாயிருக்க, அவரைக் காட்டுக்குத் துரத்திவிட்டீர்;நீர் ராஜலக்ஷணஹீனர்; உமக்குக் கண்ணோ இல்லை. நீர் *தருமாத்துமாவாகவும் தருமமறிந்தவராகவு மிருந்தபோதிலும், இராஜ்யம் உமக்கு இல்லை. உமக்கு ராஜ்ய மில்லாமையால், பாண்டு ராஜா ராஜ்யத்தை யடைந்தார். ஆகையால், ராஜ்யம் அந்தவமிசத்துக்கே உரியது. யுதிஷ்டிரர், மிருதுவான சுபாவம் தயை தருமம் ஸத்தியம் சூரத்தனம் முதலிய குணங்கள் உள்ளவ ரானபடியாலும், நீர் அவருக்குப் பெரியோரானபடியாலும், அவர், நீர் செய்த உபத்திரவங்களைப் பொறுத்திருக்கிறார். ராஜ்யம் ஆளுகிறவன் பண்டிதனாக இருக்கவேணும். அந்தக்குணம் பாண்டவரிடத்தில் தவிர உம்முடைய புத்திரர்களிடத்தில் இல்லை. அப்படியிருக்க, துரியோதனன், சகுனி, கர்ணன், துச்சாசனன் என்ற இவர்களிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்து எப்படி க்ஷேமத்தை அபேக்ஷிக்கிறீர்?

ஆத்துமஞானம் நல்லகிரியை கர்மங்கள் பொறுமை தினந்தோறும்தருமம்செய்வது என்ற இந்தக்குணங்களையுடையவனும் புருஷார்த்தங்களை விடாதவனும், பண்டிதனென்றுசொல்லப்படுவான்.ஓரேவிருக்ஷத்திலிருந்து,ஸ்ருக்த்ரோணி பேஷனீ பீடனீ முதலியயஜ்ஞபாத்திரங்கள் உண்டான போதிலும், அவைகளின் யோக்கியதை வேறுவேறே; அப்படியே ஓரேவமிசத்திலே யோக்கியரும் அயோக்கியரும் பிறக்கிறார்கள். நல்ல காரியங்களைச் செய்வதும், கெட்ட காரியங்களைச் செய்யாம லிருப்பதும், பரலோகம் உண்

* இங்கே தருமாத்துமா தருமமறிந்தவர் என்னும இரண்டு விசேஷணங்களும் உபசாரத்துக்காகச் சொன்னவையாகும்.

டென்று நம்புவதும்,தெய்வம் இல்லை யென்று எண்ணுமலிருப்பதும் பண்டிதனுடைய அடையாளம். கோபம், மிதமிஞ்சின ஸந்தோஷம், பிறரை யவமதித்தல், நல்ல காரியஞ் செய்வதில் வெட்கம், வணக்கமில்லாமை, நான்தான் பெரியவனென்னும் எண்ணம் என்ற இந்தத் துர்க்குணங்கள் எவனைப் புருஷார்த்தங்களிலிருந்து குறைக்கமாட்டாவோ, அவன் தான் பண்டிதன். எவன் காரியஞ்செய்வதையும் ஆலோசனை செய்வதையும் ஆலோசனை செய்ததையும் பிறர் அறியமாட்டார்களோ, காரியஞ் செய்த பிறகுதான் அறிவார்களோ, அவன்தான் பண்டிதன். குளிரும் வெப்பமும் பயமும் பிரீதியும் ஸம்பத்தும் விபத்தும் எவனுடைய காரியத்தைக் கெடுக்கமாட்டாவோ, அவன் தான் பண்டிதன். எவனுடைய பிரஜ்ஞை ஸம்ஸாரத்திலிருந்தாலும் தருமார்த்தங்களைச் சேர்க்கிறதோ, காமத்தைக் காட்டிலும் அர்த்தத்தை மேலானதாக எண்ணுகிறதோ, அவன் தான் பண்டிதன். பண்டிதர்கள் தம்மாற் கூடுமான காரியத்தையே செய்ய விரும்புவார்கள்; அதைத்தான் செய்வார்கள்; யாரையும் அவமதிக்கமாட்டார்கள். எவன் பிறர் சொல்லுவதைச் சீக்கிரம் அறிகிருனோ, தான் அறிந்தது சரிதான் என்று உறுதிப்படுவதற்காகப் பிறர்சொல்லுவதை வெகுநேரம் கேட்கிருனோ, நன்ருய் அறிந்த பிறகுதான் காரியஞ்செய்யத் தொடங்குகிருனோ, தன்னிஷ்டப்படியெல்லாஞ் செய்யமாட்டானோ, கேட்காமலிருக்கையில் பிறருடைய காரியத்தில் தலையிடமாட்டானோ, அவன் தான் பண்டிதன். பண்டிதர்கள் தமக்குக் கிட்டாததை விரும்பமாட்டார்கள்; நடந்து விட்ட செயலைப் பற்றி விசனப்படமாட்டார்கள்; ஆபத்து நேரிட்ட போதும் மோஹமடையமாட்டார்கள்; இந்தக் காரியம் நம்மாற் செய்ய முடியும் என்று நிச்சயித்த

பிறகுதான் ஒருகாரியத்தை ஆரம்பிப்பார்கள்; ஆரம்பித்தபிறகு நடுவில் நிறுத்த மாட்டார்கள்; காலத்தை வீணாக்க மாட்டார்கள்; மனஸைச் சுவாதீனமாக வைத்துக்கொண்டிருப்பார்கள். திருதராஷ்டிரா! பண்டிதர்கள் உத்தமபுருஷர்கள் செய்யத்தகுந்த காரியத்திலேயே சந்தோஷமடைவார்கள்; ஐசுவரியத்தைக் கொடுக்கிற காரியங்களைத்தான் செய்வார்கள்; தமக்கு இதஞ்செய்பவனைக் கண்டு காரணமில்லாமல் துவேஷங் கொள்ளமாட்டார்கள். எவன் தன்னைப்பிறர்பெருமைப்படுத்துவதால் ஆநந்தமடையமாட்டானோ, அவமானப்படுத்தினதால் விசனப்படமாட்டனோ, கங்காநதியின் மடுப்போல் எப்போதும் கலங்காம லிருப்பனோ, அவன்தான் பண்டிதன். எல்லாப் பிராணிகளுடைய உண்மையையும்—அதாவது-எல்லாம் நாசமடையுந்தன்மையுள்ள தென்பதையும்,—காரியஞ்செய்யும் விதத்தையும், அதற்கு வேண்டிய பதார்த்தங்களையும் அறிந்தவன் எவனோ, அவன்தான் பண்டிதன். எவன் தடங்கலில்லாமல் பேசுவானோ, சமத்காரமான கதைகளை அறிந்தவனோ, ஊஹமுள்ளவனோ, சமயத்திற்கு ஏற்றமதி யுள்ளவனோ, விஷயத்தைச் சீக்கிரஞ் சொல்லத் தெரிந்தவனோ, அவன் தான் பண்டிதன். எவன் தன் புத்திக்குத் தகுந்தபடி சாஸ்திரங்களைப் படித்திருக்கிறானோ, படிப்புக்குத்தக்கபடி புத்தியுள்ளவனோ, பெரியோர்கள்செய்த ஏற்பாட்டைக் கெடாதவனோ, அவன் பண்டிதன் என்ற பெயரை யடைவான். எவன் ஏராளமான திரவியத்தையும் வித்தையையும் ஐசுவரியத்தையும் அடைந்தும் கர்வமில்லாமலிருக்கிறானோ, அவன் பண்டிதன்.

எவன் தன் காரியத்தை விட்டுப் பிறர்காரியத்தைச் செய்கிறானோ, சிநேகிதன்விஷயத்தில் கபடமாக நடக்கிறானோ, அவன் மூர்க்கனேயாவன். எவன் படிப்பு இல்லா

மலே கர்வமடைகிருனே, தரித்திரனுயிருந்தும் உதாரகுண முடையவனுக இருக்கிருனே, * சூதாட்டத்தினுல் திரவியம் ஸம்பாதிக்க விரும்புகிருனே, அவன் மூடன். எவன் தன்மேல் அன்பு இல்லாதவனை விரும்புகிருனே, † அன்பு உள்ளவனைக் கைவிடுகிருனே, பலவானுடன் துவேஷஞ் செய்கிருனே, அவன் மூடன். சத்துருவை மித்திரனுக நினைக்கிறவனும், மித்திரனைப் பகைத்து அவனைக் கொல்ல யத்தனஞ் செய்கிறவனும், கெட்ட காரியங்களைச் செய்ய யத்தநஞ் செய்கிறவனும், மூடபுத்தி யெனப்படுவான். ‡ எவன் தன் வேலைகளை வேலைக்காரர்களாலேயே செய்து கொள்ளுகிருனே, எல்லாரிடத்திலும் சந்தேகப்படுகிருனே, சீக்கிரஞ் செய்யவேண்டியதை ஆலசியஞ் செய்கிருனே, அவன் மூடன். எவன் பிதிருக்களுக்குச் சிராத்தஞ் செய்யாதவனே, தேவதைகளைப் பூஜியாதவனே, கபடமில்லாத மித்திரனை அடையாதவனே, அவன் மூடன் என்றே சொல்லப்படுவான். எவன் கூப்பிடாத இடத்திற்குப் போகிருனே, கேட்காதபோது பேசுகிருனே, நம்பத்தகாதவனை நம்புகிருனே, அவன் மூர்க்கனேயாவன். எவன் தான் தோஷமுள்ளவனுயிருக்கும்போது பிறரைத் தூஷிக்கிருனே, அதிகாரமில்லாமலிருக்கும்போது கோபிக்கிருனே, அவன் மூடனே. எவன் தன்னுடைய பலத்தைத் தெரிந்து கொள்ளாமல் பெருத்த காரியங்களைச் செய்கிருனே, தருமஅர்த்தங்களை உண்டாக்காத காரியங்களைச் செய்கிருனே,

* இது சகுனியைப்பற்றிச் சொன்னதாகும்.

† பாண்டவர்களைத் தள்ளிவிட்டுக் கர்ணனைச் சேர்த்துக் கொண்ட திருதராஷ்டிரனைப்பற்றிச் சொன்னது இச்சொல்.

‡ இது, அரக்குமாளிகை முதலான காரியங்களைக் குறித்ததாகும்.

முடிவு அடைதற்குஅரியனவான தொழில்களைப் பிரயத்தன மில்லாமலே அடைய விரும்புகிறானோ, அவன் மூடனென்று சொல்லப்படுவான். எவன் அயோக்கியனுக்கு வித்தியாதானஞ்செய்கிறானோ, யோக்கியனுக்குச் செய்யாதிருக்கிறானோ, பிழைப்புக்காக உலோபியை அண்டுகிறானோ, அவன் மூர்க்கனென்று சொல்லப்படுவான். எவன் தனக்கு ஏராளமான சம்பத்து இருக்கும்போது இஷ்டமித்திரர்களுக்குக் கொடாமல் தான் தனியாக அனுபவிக்கிறானோ, தன் தகுதிக்கு ஏலாத விலையுயர்ந்த வஸ்திரங்களை யுடுக்கிறானோ, அவன் மூடனென்று சொல்லப்படுவான்.

ஒருவன் பாவஞ் செய்து திரவியம் சம்பாதிக்கிறான்: அதன் சுகத்தைப் பலர் அனுபவிக்கிறார்கள்: அவர்களுக்குப் பாவத்தின் பயன் உண்டாகாது; செய்தவனே பாவப் பயனை அனுபவிப்பான்.

வில்லாளி விடுத்த அம்பு ஒருவனைத்தான் கொல்லும்: ஒருகால் கொல்லாவிடினும் விடும்; புத்திசாலி செய்த யுக்தியோ, ராஜாவையும் ராஜ்யத்தையும் ஒருசேர அழித்துவிடும். *ஒன்றால் இரண்டை நிச்சயஞ் செய்யவேண்டும்.

* இவற்றின் பொருள்—ஒன்றாகிய புத்தியால் காரியம் அகாரியம் என்னும் இரண்டையும் நிச்சயஞ் செய்யவேணும். ஸாமம் தானம் பேதம் தண்டம் என்னும் நான்கு உபாயங்களால், சத்துரு மித்திரர் உதாஸீனர் என்கிற மூன்றுவிதமான ஜனங்களையும் ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளவேணும். ஐந்து இந்திரியங்களையும் ஜயிக்கவேணும். ஸந்தி, விக்கிரகம், யானம், ஆஸனம், த்வைதீபாவம், ஸமாச்ரயம் என்ற ஆறு குணங்களையும் அறியவேணும். காதல், சூது, வேட்டை, பானம், கடும்வார்த்தை, கடுந்தண்டனை, காரியத்தைக்கெடுப்பது ஆகிய ஏழு துர்க்குணங்களையும் விடவேணும். இப்படிச் செய்கிறவனுக்குத்தான் ஸுகமுண்டாகும் என்பது.

நான்கால் மூன்றைச் சுவாதீனப்படுத்தவேண்டும். ஐந்தை ஜயித்து ஆறை அறிந்து ஏழை விடவேண்டும். இப்படிச் செய்கிறவனுக்கு ஸுகமே கிடைக்கும்.

விஷமும், ஆயுதமும் ஒருவனைத்தான் கொல்லும்; மந்திராலோசனை கெட்டுப்போனால், பிரஜைகளையும் இராஜ்யத்தையும் ராஜாவையும் கொன்றுவிடும். சுவையுள்ள பதார்த்தத்தை ஒருவனே புசிக்கக்கூடாது; அதுபோலவே, ஒருவனே மந்திராலோசனை செய்யக்கூடாது; ஒருத்தனே வழி நடக்கக்கூடாது; பலர் தூங்கும்போது ஒருவன் விழித்திருக்கக்கூடாது.

சமுத்திரத்தைத் தாண்ட எப்படிக் கப்பல் ஒன்று தான் சாதனமோ, அப்படியே ஸம்ஸாரத்தைத் தாண்டிச் சுவர்க்கத்தை யடைவதற்கு ஸத்தியம் ஒன்றுதான் சாதனம். இதைத் தவிர வேறொன்றும் இல்லை. இதை நீர் அறியவில்லை.

பொறுமையுள்ளவனை ஜனங்கள் அசக்தனென்று சொல்லுவார்கள் ; அது ஒன்றுதான் அவனுக்குக் குறைவு ; வேறு ஒன்றுமில்லை. ஆனால், அது அவனுக்குத் தோஷமாகாது. பொறுமைதான் மேன்மையான வலிமை. வலிமையில்லாதவர்களுக்குப் பொறுமைதான் குணம். பலவான்களுக்கும் பொறுமை யென்பதுதான் அலங்காரம்; பொறுமைதான் வசீகரண மந்திரம்; பொறுமையால் முடியாதது ஒன்றுமில்லை. பொறுமை, சக்தியென்னும் ஆயுதத்திற்குச் சமானம் ; அது கையிலிருந்தால் துர்ச்சனர்கள் என்ன செய்யமாட்டுவார்கள் ? புல் இல்லாத பூமியின்மேல் விழுந்த நெருப்புச் சுயமாகவே அவிந்துவிடுகிறது; அதுபோல், பொறுமையுள்ளவன்மேல் துர்ச்சனன் சாற்றின தோஷம் தானே வீணாய்விடுகிறது. பொறுமையில்லாதவன் பிறர்மேற்குற்றஞ்

சாட்டுவான். க்ஷேமமுண்டாக்குவதில் மேன்மையானது தருமம் ஒன்றுதான்; குணங்களில் பொறுமைதான் மேலானது; சந்தோஷத்தை யுண்டாக்குவதில் மேன்மையானது வித்யை; எந்தப் பிராணியையும் இம்சிக்காமலிருப்பதுதான் ஸுகம்.

வளையிலுள்ள பிராணிகளைச் சர்ப்பம் விழுங்குவதுபோல், சத்துருவோடு யுத்தஞ் செய்யாத ராஜாவையும், பொருள் சம்பாதிக்கும்படி தேசாந்தரம் போகாத பிராமணனையும் பூமி விழுங்கிவிடும். கொடுமையான வார்த்தையைச் சொல்லாமலும் அயோக்கியசகவாசஞ் செய்யாமலும் இருக்கிறவன், இவ்வுலகத்தில் நன்ருய் விளங்குவான். பிறர் செய்வதையே அநுசரித்துச் செய்கிறவர்கள் இருவர். ஒரு ஸ்திரீ எவனை இச்சிக்கிருளோ, அவனைத்தான் மற்றை ஸ்திரீகளும் இச்சிப்பார்கள்; ஒருவன் எவனுக்கு மரியாதை செய்கிருனோ, அவனைத்தான் மூர்க்கர்கள் பூஜிப்பார்கள். திரவியமில்லாமலிருக்கும்போது, மிகுந்த ஸுகத்தை விரும்புவதும் சிக்ஷைசெய்ய வல்லமையில்லாதபோது கோபிப்பதும் இவ்விரண்டு செய்கைகளும், தேகத்துக்கு உபத்திரவத்தைச் செய்யும் முள்ளுக்கு ஒப்பானவை. எவன் கிருகஸ்தாச்சிரமத்திலிருந்துகொண்டு முயற்சி செய்யாமல் சோம்பேறியாயிருக்கிருனோ, ஸந்நியாஸாச்சிரமத்திலிருந்துகொண்டு லோககாரியங்களில் முயல்கிருனோ, அவ்விருவரும், தகாதவற்றைச் செய்பவராதலால் விளங்கமாட்டார்கள். வல்லமையிருக்கும்போது பொறுப்பவனும், தரித்திரனுகை இருக்கும்போதும் தன் யோக்கியதைக்குத் தக்கபடி தானஞ் செய்கிறவனும், சுவர்க்கத்தைக் காட்டிலும் மேன்மையான பதவியை அடைவர். நியாயமாய்ச் சம்பாதித்த திரவியத்துக்குக்கூட இரண்டு கேடு உண்டு; அவை—

சற்பாத்திரத்திற் கொடுக்காம லிருப்பதும், அபாத்திரத் திற் கொடுப்பது மாம். தானஞ்செய்யாத தனவானையும் தபஸுசெய்யாத தரித்திரனையும், கழுத்திற் பெருங் கல்லைக் கட்டி ஜலத்திலே தள்ளிவிடலாம். யோகாப்பியாஸஞ் செய்து இந்தத்தேகத்தை விட்ட ஸந்நியாஸியும், யுத்தத் தில் சத்துருக்களுக்கு எதிர்முகமாக நின்று போர் செய்து தேகத்தை விட்ட வீரனும், சூரிய மண்டலத்தைப் பேதித் துக்கொண்டு சுவர்க்கலோகத்துக்குப் போவார்கள்.

காரியத்தை நிறைவேற்றிக்கொள்வதற்கு, உத்தமம் மத்திமம் அதமம் ஆக மூன்று உபாயங்கள் உண்டு. அவை களில் ஸாமம் உத்தமம்; தானபேதங்கள் மத்திமம்; தண் டம் [அதாவது-யுத்தம்] அதமம் என்று வேதமோதினவர் சொல்வார்கள். மனுஷ்யர்கள், உத்தமர் மத்திமர் அதமர் என்று மூவகையானவர். அவரவர்களை அவரவருக்குத் தக்கவேலைகளில் அரசன் ஏவவேண்டும். பாரியை, தாஸன், புத்திரன் ஆகிய மூவரும் தனமில்லாதவர்கள். அவர்களுக்கு ஏதேனும் தனம் கிடைத்தாலும், அது, அவர்களுடைய யஜமானனைச் சேர்ந்தது. பிறருடைய திரவியத்தை அபகரிப்பதும், பிறர் மனைவிமாரைப் பலாத்காரஞ் செய்வ தும், மித்திரனைக்கைவிடுவதும் ஆகிய மூன்று தோஷங் களும் நாசத்தை உண்டுபண்ணும். காமம், குரோதம், லோபம் என்ற இந்த மூன்று தோஷங்களும் நரகத் துக்கு வழியாகும். ஆகையால், இவைகளை விடவேண் டும். தேவர்களைக் குறித்துத் தபஸ்செய்து வரங்களைப் பெறுவதும், ராஜ்யமடைவதும், ஸத்புத்திரனைப் பெறுவ தும் ஆகிய இம்மூன்றும் ஒரு தட்டு: ஆபத்தில் அகப்பட்ட சத்துருவை மீட்பது, மற்றொரு பக்கத்துத் தட்டு; அதா வது-அம்மூன்றும் இவ்வொன்றுக்குச் சமானமானவை.

அடிமை சேவகன் நான் உன்னைச்சேர்ந்தவனென்று சொல்லுகிறவன் இம்மூவரும், சரண மடைந்தால், தனக்கு எவ்வளவு கஷ்டம் நேர்ந்தாலும், அவர்களைக் கைவிடக் கூடாது. புத்தியீனர் ஆலசியமுள்ளவர் வீணுகநேரம் போக்குகிறவர் பயந்தவர்கள் தன்னைஸ்தோத்திரஞ்செய்கிற வர் ஆகிய இவர்களுடன் மந்திராலோசனை செய்யக்கூடாது. கிருகஸ்தாச்சிரமத்தி லிருப்பவனுடைய வீட்டிலே,* வயசு முதிர்ந்த ஞானியும், ஆபத்தில் அகப்பட்ட நல்ல குலத்திற் பிறந்தவனும், ஏழையான நண்பனும், குழந்தைகளில்லாத சகோதரியும் இருக்கவேணும்.

தேவேந்திரன் பிருஹஸ்பதியைப் பார்த்து 'உடனே பலிப்பது எது?' என்று கேட்டதற்கு, அந்தப் பிருஹஸ்பதி, 'தேவர்களுடைய இச்சையும், புத்திமான்களின் வல்லமையும், வித்தை கற்றவர்களின் விநயமும், பாபிகளின் விநாசமும்' என்று மறுமொழி சொன்னர். அக்கினிஹோத்திரம், மௌநவிரதம், வேதாத்தியயநம், யாகம் என்ற இந்நான்கும் விதிப்படி செய்யப்பட்டால், க்ஷேமத்தைக் கொடுக்கும்; விதிதவறி டம்பத்துக்காகச் செய்யப்பட்டால், பயத்தைத் தரும். பிதா, மாதா, அக்கினி, பரமாத்துமா, குரு ஆகிய ஐவரையும் அக்கினியைப்போலவே உபசரிக்கவேண்டும். தேவர், பிதிருக்கள், மநுஷ்யர்கள், ஸந்நியாஸி, அதிதி ஆகிய ஐவரையும் பூஜிக்கிறவன் மிக்ககீர்த்தியை யடைவான். மித்திரர்கள், சத்துருக்கள், உதாஸீநர்கள், குருக்கள், சேவகர்கள் ஆகிய ஐவரும் போகுமிடமெல்லாம் வருவார்கள். கண், செவி, மூக்கு, வாய், உடம்பு என்ற இந்த ஐந்து இந்திரி

* வயசுமுதிர்ந்தவன், குலதருமங்களை உபதேசிப்பான்; குலீநன், ஆசாரங்களை உபதேசஞ் செய்வான்; நண்டன், ஹிதஞ்சொல்வான்; சகோதரி, பணத்தைக் காப்பாற்றுவாள்.

யங்களுக்குள் ஏதேனும் ஒன்று ஓட்டையானாலும் [ஸ்வபாவம் மாறினாலும்], ஜலம் நிரம்பிய ஒரு ஓட்டைப்பாத்திரத்தில் ஓட்டைவழியாய் ஜலம் ஒழுகிப்போவதுபோல், இந்திரியத்தின் வழியாய் மனுஷ்யனுடைய புத்தி ஒழுகிப்போகும்.

க்ஷேமத்தை விரும்புகிறவன், தூக்கம் களைப்பு பயம் கோபம் வீணாய்நேரம்போக்குதல் ஆலசியம் ஆகிய இவ்வாறு தோஷங்களையும் விடவேண்டும். பாடஞ் சொல்லத் தெரியாத ஆசாரியனையும், வேதாத்தியயநஞ் செய்யாத *ரித்விக்கையும், ரக்ஷிக்குந்தொழிலைச்செய்யாத அரசனையும், அப்பிரியமாய்ப் பேசும் பாரியையையும், ஊரில்தானே இருக்க விரும்பும் இடையனையும், வனத்தில் தானே வசிக்க விரும்பும் அம்பட்டனையும், உடைந்துபோன கப்பலை விடுவது போல் விட்டுவிடவேண்டும். ஸத்தியம், தானம், சுறுசுறுப்பு, பிறர்மீது குற்றஞ்சாட்டாமலிருத்தல், பொறுமை, தைரியம் இந்த ஆறுகுணங்களையும் ஒருபொழுதும் விடக்கூடாது. திரவியமும், ஆரோக்கியமும், பிரியமும் இனிமையுமான பேச்சுக்களைப் பேசுகிற மனைவியும், தன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் புத்திரனும், பணஞ் சம்பாதித்தற்கு உரிய வித்யையும் ஆகிய இவ்வாறும் மநுஷ்யவாழ்க்கைக்குச் சுககரமானவை. மனுஷ்யனுடைய தேகத்தில், காமம் குரோதம் லோபம் மோஹம் மதம் மாற்சரியம் என்று ஆறு திருடர்கள் இருக்கிறார்கள்; அவர்களுடைய வசமாகாமலிருப்பவனுக்குப் பாபம் நேரிடாது, அப்படிப்பட்டவனுக்குக் கெடுதல் எங்கிருந்து வரும்?

அவதானமில்லாதவர்களிடத்தில் திருடர்களும், ரோகிகளிடத்தில் வைத்தியர்களும், காதல்கொண்டவர்க

*ரித்விக்கு—புரோகிதஞ் செய்து வைக்கிறவன்.

ளிடத்தில் வேசியர்களும், யாகஞ்செய்கிறவர்களிடத்தில் உபாத்தியாயர்களும், சண்டைசெய்கிறவர்களிடத்தில் அரசரும், மூர்க்கர்களிடத்தில் பண்டிதர்களும் பிழைக்கிறார்கள். ஆடுமாடுகள், ஊழியம், பயிர், பாரியை, கல்வி, அயோக்கியஸஹவாஸம் இவ்வாறும், கொஞ்சநேரம் பாராமலிருந்தால் கெட்டுப்போகும். சிஷ்யர்கள் வித்தியாப்பியாசம் செய்தபிறகு ஆசாரியனையும், புத்திரர்கள் விவாஹமான பிறகு மாதாவையும், புருஷர்கள் காமபூர்த்தியான பிறகு ஸ்திரீயையும், கார்யத்தை முடிக்க வேண்டியவர்கள் கார்யமானபிறகு அதைச் செய்து கொடுத்தவனையும், யாற்றைக் கடக்க விரும்பியவர் ஆற்றைத் தாண்டின பிறகு ஓடத்தையும், ரோகி வியாதிஅனுகூலமானபிறகு வைத்தியனையும் அவர்கள் செய்த உபகாரத்தை நினையாமல் அவமதிக்கிறார்கள்.

ரோகமில்லாமை, கடனில்லாமை, தேசாந்தரஸஞ்சாரமில்லாமை, நல்ல மனுஷ்யர்களுடன் சேர்க்கை, அனுகூலமான ஜீவநம், பயமில்லாதஇடத்தில்வாஸம் இவ்வாறும் உலகவாழ்க்கைக்குச் சுககரம். மிதம்மிஞ்சின பொறுமையுள்ளவன், அதிகதயையையுடையவன், ஸந்தோஷமில்லாதவன், கோபக்காரன், எல்லாரிடத்திலுஞ் சந்தேகப்படுகிறவன், பிறருடைய பாக்கியத்தாற் பிழைக்கிறவன் இவ்வாறு பேரும் எக்காலத்திலும் துக்கமுடையவர்கள்.

காதல், சூது, வேட்டை, கள்ளுண்டல், கடுமையான பேச்சு, தயையில்லாமல் தண்டிப்பது, லஞ்சம்வாங்குவது ஆகிய இவ்வேழுதோஷங்களும் சங்கடத்தைக் கொடுக்குந் தன்மையுள்ளவை. வெகுகாலம் இராச்சியத்தையாண்டு வேரூன்றியிருக்கும் அரசர்களுங் கூட மேற்சொன்ன துர்க்

குணங்களால் நாசமடைகிறார்கள்; ஆகையால், அரசன் இவைகளை விடவேண்டும்.

சீக்கிரம் நாசமடையப் போகிறவனுக்கு முற்குறிகள் எட்டு; அவை—பிராமணர்களுடன் துவேஷம், அவர்களை அவமதித்தல், பிராமணத்திரவியத்தை அபஹரித்தல், அவர்களைக் கொல்லமுயலுதல், பிராம்மணர்களை நிந்திப்பதில் சந்தோஷம், அவர்களைப் பிறர் ஸ்தோத்திரஞ் செய்வதைக் கேட்டுப் பொறாமை, காரியகாலத்தில் பிராமணரை நினையாமை, அவர்கள் யாசித்தால் அவர்களிடத்தில் தோஷத்தைக் கற்பித்தல்: இவைகளை அறிந்து விலக்கவேண்டும்.

மித்திரர்களுடன்சேர்க்கை, ஏராளமானதனலாபம், புத்திரனைஆலிங்கனஞ்செய்துகொள்வது, ஸ்திரீ ஸம்போகத்தில்இருவருக்கும்ஸமபலம், பார்யையுடன் இனிதாகப் பேசுவது, தன்னுடைய ஜாதியில் மேன்மையடைவது, விரும்பின பதார்த்தத்தைப்பெறுவது, ஸபையில் ஸம்மானமடைவது என்ற இவை எட்டும் ஆநந்தகரம். புத்தி, நல்ல குலத்திற் பிறப்பு, இந்திரியங்களை அடக்குதல், சாஸ்திரங்களை யப்பியசிப்பது, சூரத்தனம், மிதமான பேச்சு, சக்திக்குத் தக்கபடி கொடை, நன்றியறிதல் என்ற இந்த எட்டுக்குணங்களும் மனுஷ்யனுக்கு மேன்மையை யுண்டு பண்ணுகின்றன.

இந்தத் தேகம் என்பது ஒருவீடு. இதற்குக் கண்கள் இரண்டு: காதுகள் இரண்டு: மூக்குத் துவாரங்கள் இரண்டு: வாய் ஒன்று: குதத்துவாரம் ஒன்று: இரகசியமானத் துவாரம் ஒன்று: ஆக ஒன்பது வாசல்கள் உள்ளன. * அவித்யை, காமம், கருமம் என்ற இம்மூன்றும் இவ்வீட்டைச் சுமக்குந் தூண்கள். ரூபம், ரஸம், கந்தம், பரிசம், சப்

* அவித்யை—மாயை அல்லது அஞ்ஞானம்.

தம் என்ற இந்த ஐந்தும் ஸாக்ஷிகள். இதில் ஜீவாத்துமா வசிக்கிருன். இதை யறிந்தவன்தான் பண்டிதன்.

வலிப்பு முதலிய ரோகங்களினுல் புத்தி யிழந்தவன், கட்குடி முதலானவற்ருல் புத்திசுவாதீன மில்லாதவன், பைத்தியங்கொண்டவன், சிரமப்பட்டவன், கோபமடைந்தவன், பசித்தவன், ஆத்திரக்காரன், லோபி, பயந்தவன், காதல்கொண்டவன் ஆகிய இப்பத்துச் சனங்களுக்குந் தருமம் தெரியாது; ஆகையால், இவர்களுடன் பண்டிதன் சேரக்கூடாது. இந்த விஷயத்தில், அசுரர்களுக்குள் சிரேஷ்டனுன சுதன்வாவிற்கும் அவனுடைய புத்திரனுக்கும் நடந்த சம்பாஷணை புராணங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது.

எந்த அரசன் காமத்தையும் கோபத்தையும் விட்டிருக்கிருனே, திரவியத்தைச் சற்பாத்திரத்திற் கொடுக்கிருனே, மனுஷ்யர்களின் தாரதமியத்தை யறிந்திருக்கிருனே, சாஸ்திரம் படித்திருக்கிருனே, காரியங்களைச் சீக்கிரஞ் செய்கிருனே, அவனை எல்லாரும் பிரமாணமாக ஒத்துக் கொள்ளுகிருர்கள். எவன் ஜனங்களுக்குத் தன்னிடத்தில் நம்பிக்கை வருமாறு தொழிலைச் செய்யத் தெரிந்தவனே, பிறருடைய தோஷங்களை நன்ருயறிந்தபிறகு சிக்ஷை செய்கிருனே, சிக்ஷை செய்யும் அளவையும் பொறுக்க வேண்டிய இடத்தையும் அறிந்திருக்கிருனே, அவனை விட்டு லக்ஷ்மி விலகமாட்டாள். எவன் தன்சத்துரு துர்ப்பலனுக இருந்தாலும் அவனை அலட்சியஞ்செய்ய மாட்டானே, சத்துருவின்செய்கைகளை யறிந்து அவைகளுக்குத் தக்கபடி அவனை எதிர்ப்பானே, அதிக பலசாலியான சத்துருவுடன் போர்செய்யமாட்டானே, சமயம் நேரிட்டபோது தன் பராக்கிரமத்தைக் காண்பிப்பானே, அவன்தான் சாமர்த்தியசாலி. சங்கடம் நேரிட்டபோது

எவன் விசனப்படுகிறதில்லையோ, ஜாக்கிரதையாகக் காரியங்களைச் செய்கிறானோ, அந்தமகாபுருஷன் சத்துருக்களை ஜயிப்பான்.

எவன், பாவிகளுடன்சேர்க்கை பிறர்பார்யைகளைப் பலாத்காரஞ்செய்வது டம்பம் திருடு கோள்சொல்லுதல் மத்தியபானம் என்ற இவைகளைச் செய்வதும் இல்லையோ, பிரயோசன மில்லாமல் வீட்டைவிட்டு வெளியே போகமாட்டானோ,அவன் எக்காலத்திலும் சுகமுள்ளவன்.எவன், தருமம் அருத்தம் காமம் என்ற த்ரிவர்க்கத்தைக் கோபகாலத்தில் மேற்கொள்வதில்லையோ, கேட்டால் உண்மையைத்தான் சொல்லுவானோ, சிநேகிதனுடைய காரியத்தில் கலகஞ்செய்யமாட்டானோ, தன்னை அவமதித்தால் கோபங்கொள்ளமாட்டானோ, அவன் ஸமர்த்தன். எவன் பிறரிடத்தில் அசூயைப்படுகிறதில்லையோ, எல்லாவிடத்திலும் தயை செய்கிறவனோ, தான் துர்ப்பலனாக இருந்து பலவானோடு விரோதஞ் செய்யமாட்டானோ, எவரிடத்திலும் மரியாதையை மீறிப் பேசமாட்டானோ, கலகம் நேரிட்டால் பொறுப்பானோ, அவன் எங்கும் புகழ்பெறுவான். எவன் தன் தகுதியை மீறி உடுக்கமாட்டானோ, சூரனாகவிருந்தும் பிறரை நிந்திக்கமாட்டானோ, கோபமடைந்தாலும் கெட்ட வார்த்தைகளைப் பேசமாட்டானோ, அவன் எல்லாருக்கும் பிரியனாவான். எவன் தீர்ந்துபோன விரோதத்தை மறுபடியும் மூட்டிவிடமாட்டானோ, அவன் கெடமாட்டான். எவன் ஏழையாய்ப்போனாலும் அகாரியஞ் செய்யமாட்டானோ, அவனை, பெரியோர் ‘பெரியோன்’ என்பார்கள். எவன் தனக்குச் சுகம் கிடைத்ததனால் அதிக சந்தோஷமடைய மாட்டானோ, பிறர் துக்கப்பட்டால் தான் விசனப்படுவானோ, கொடுத்துவிட்டுப் பச்சாத்தாபப்படமாட்

டானே, அவனை நல்லசுபாவமுள்ளவ னென்று ஜனங்கள் சொல்லுவார்கள். எவன் தேசாசாரங்களையும் காலத்தை யும் ஜாதிகளின்தருமங்களையும் ஆதரிக்கிறானே, நல்லவை தீயவைகளை அறிவானே, அவன் எங்கேபோனாலும் மேலா கவே இருப்பான். எவன் டம்பம், மோஹம், மாற்சரியம், பாபகாரியம், அரசருடன் துவேஷம், கோள்சொல்லுதல், கூட்டத்துடன் பகை, பித்தம்பிடித்தவர்களுடனும் துர்ச் சனர்களுடனும் கலகஞ்செய்வது ஆகிய இந்த எட்டுத் தோஷங்களையும் விடுவானே, அவனே புத்திமான்.

இந்திரியங்களையடக்குதல், சுத்தி, தேவகாரியங்கள், மங்களகாரியங்கள், பிராயச்சித்தம், நாநாவிதமானஉலக வழக்குக்கள் இவைகளை நாள்தோறும் எவன் மேற்கொள் வானே, அவனைத் தேவதைகள்கூட ஆராதிப்பார்கள். எவன் தனக்குச் சமானமான ஜநங்களுடனே, விவாஹம் ஸ்நேஹம் வழக்கு ஸம்பாஷணை என்ற இவைகளைச் செய்கி றானே, தாழ்ந்தவர்களுடன் செய்கிறதில்லையோ, குணசாலி களுக்கு மரியாதை செய்கிறானே, அந்தப்புத்திமானுடைய நீதிகளை எல்லோரும் மெச்சுவார்கள்.

எவன் தின்பண்டங்களைத் தன்னை அண்டினவர்க ளுக்குப் பங்கிட்டுக்கொடுத்தது போக மிச்சமிருப்பதை மிதமாய்ச் சாப்பிடுகிறானே, ஏராளமாக வேலைகளைச் செய்து மிதமாகத் தூங்குகிறானே, சத்துருக்களும் தன்னிடத்தில் வந்து யாசித்தால் அவர்களுக்குக் கொடுக்கிறானே, அந்தப் புத்திமானை ஒருபோதும் தீங்கு அண்டாது.

எவன் தான் செய்ய இச்சித்ததையும் கெடுதி செய்த தையும் செய்த மந்திராலோசனையையும் பிறர் அறிய மாட் டார்களோ, அவன்செய்கிற எந்தக்காரியமும் கெடுகிறதில்லை. எவன் சகலப்பிராணிகளுக்கும் க்ஷேமத்தைச் செய்கிற

வனே, சத்தியவாதியோ, சுத்தமாய் இளகிய மனத்தை யுடையவனே, பிறருக்கு மேன்மையைக் கொடுக்கிறவனே, அவன் தங்களுடைய கூட்டத்தில் மணிபோலப் பிரகாசிப்பான். எவன் தன் பிழையைக் கண்டு தன்னுள்ளே தான் வெட்கப்படுவானே, அவன், மகாசுத்தசுபாவமுடையவன்; அவன் சூரியனைப்போற் பிரகாசிப்பான்.

திருதராஷ்டிரரே! உம்முடைய தம்பியாகிய பாண்டு மஹாராஜாவுக்குக் கிந்தமருடைய சாபம் நேரிட்டபிறகு, தேவர்களாற் பிறந்த பாண்டவர்கள் ஐவரும், இந்திரனுக்கு ஒப்பானவர்கள். அவர்களைப் பாலியத்தில் நீர்தான் வளர்த்தீர்; வித்தியாப்பியாசமும் செய்வித்தீர். அவர்கள் நீரிட்ட கட்டளையைத்தான் செய்கிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய இராச்சியபாகத்தை அவர்களுக்குக் கொடுத்தால், நீர் உம்முடைய பிள்ளைகளோடும் க்ஷேமமாயிருப்பீர்; இல்லாவிட்டால், தேவர்களும் மனுஷ்யர்களும் உம்மை நிந்திப்பார்கள்.''

திருதராஷ்டிரன் :—'' விதுர! எனக்கு நித்திரை வரவில்லை. எண்ணமிட்டு எண்ணமிட்டு என்தேகம் எரிகிறது. நான் என்ன செய்தால், எனக்கு இதம் உண்டாகும்? நீ சொல்லு. தருமமும் அருத்தமும் உனக்கே தெரியும். விதுர! நீ மிகவும் சமர்த்தன். என்ன செய்தால் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இதமாகும்? அதை எனக்குச் சொல்லு. நான் தருமபுத்திரன்விஷயத்தில் அபராதஞ் செய்திருக்கிறேன். அதை நான் நினைத்தால், மேல் மேலும் சங்கடம் நேரிடு மென்று தோன்றுகிறது. ஆகையால், புத்திமானாகிய விதுர! யுதிஷ்டிரனுடைய அபிப்பிராயம் என்ன இருக்கும்? அதை ஆலோசித்துச் சொல்லு.''

விதுரர்:--"எவன் தன்நண்பனுடைய க்ஷேமத்தை விரும்புகிருனே, அவன் அவமான மடையக் கூடாதென்று எண்ணுகிருனே, அவன் கேளாமலிருந்தாலும் நல்லதோ கெட்டதோ, பிரியமோ அப்பிரியமோ, உள்ளபடி சொல்லவேண்டும். அப்படி இருக்க, நீரோ என்னைக் கேட்டும் விட்டீர். ஆகையால், கௌரவர்களுக்கு இதமாயும் மங்களகரமாயுமிருக்கும் வார்த்தையைச் சொல்லுகிறேன். அது தருமத்தை அனுசரித்திருக்கும்; அதைக் கேளும்.

கெட்ட உபாயத்தினுல் கபடமாகச் செய்கிற காரியங்கள் ஒருசமயம் பலித்தாலும் அவைகளை விரும்புதல் தகாததே; அப்படியே, நல்ல உபாயத்தால் வஞ்சனை யில்லாமற் செய்யப்படுகிற காரியங்கள் ஒருசமயம் பலிக்காவிட்டாலும் அவைகளைப்பற்றிப் புத்திமான் விசனப்படக் கூடாது. எந்தக்காரியங்களைச் செய்ய வேண்டுமோ, அவைகளின் காரணங்களை நன்ருய் அறியவேண்டும்; சட்டெனச் செய்யக்கூடாது. காரியங்களின் காரணங்களையும் அவைகளின்முடிவையும் தன்னுடைய சக்தியையும் அறிந்த பின்பே, கூடுமாளுல், ஒருகாரியத்தைத் தொடங்கவேண்டும்; இல்லாவிட்டால், விட்டிடவேண்டும். எவன், தன்பொக்கிஷம் தேசம் சைனியம் என்ற இவைகளுடைய வளர்ச்சியையும் குறைவையும் அறியமாட்டானே, அவ்வரசன், வெகுகாலம் இராச்சியத்தி லிருக்க மாட்டான். எந்தஅரசன் மேற்சொல்லிய பொக்கிஷம் முதலியவைகளையும் தருமார்த்தங்களையும் அளந்து நன்ரு யறிவானே, அவன் வெகுகாலம் அரசனுவான். நமக்கு இராச்சியம் கிடைத்துவிட்ட தென் றெண்ணி, தன்னிஷ்டப்படி கேடுவிளைக்கின்ற துர்மார்க்கத்தில் நடக்கக் கூடாது.

ஒருவனுடையரூபத்தை மூப்பு கெடுத்துவிடுவது போல், அநியாயம் ஐசுவரியத்தைக் கெடுத்துவிடும். மீனானது மாமிசத்தின்மீதுள்ள ஆசையினால் மறைந்துள்ள இரும்புத்தூண்டின்முள்ளை விழுங்குகிறது; அதன் காரணத்தை விசாரிக்கிற தில்லை; ஆகையால், அது சிக்கிக்கொள்ளுகிறது. ஆகவே, காரியங்களைச் செய்யும்போது, அவற்றின் காரணத்தையும் அவற்றின் முடிவையும் கவனிக்க வேண்டும். எந்தப் பண்டம் விழுங்கக் கூடியதோ, தொண்டையில் நுழையுமோ, பிறகும் ஜீர்ணமாமோ, ஜீர்ணித்தாலும் இதமாயிருக்குமோ, நோய்களை யுண்டாக்காதோ, அதைத்தான் பக்ஷிக்க வேண்டும். எவன் விருக்ஷத்தின் பலத்தைக் காயாயிருக்கும்போது பறிக்கிறானோ, அவன் அதன்சுவையை அறிகிறதில்லை; விதைமுதலும் அவனுக்கு நஷ்டமாகிறது. எவன் மரத்தின் பழங்களைக் காலத்திற் பழுத்தபிறகுதான் பறிக்கிறானோ, அவன் அதன் சுவையையு மறிவான்; விதைகளும் கிடைத்து மேலும் அந்த விருக்ஷங்களை யுண்டாக்க வல்லவனும் ஆவன். எப்படி வண்டு புஷ்பங்களைக் கெடுக்காமலே அவைகளிலுள்ள தேனை மாத்திரம் குடிக்கின்றதோ, அப்படியே அரசன் குடிகளை இம்சிக்காமலே திரவியத்தை வசூலிக்க வேண்டும்: அல்லது, அரசன் மரத்திலிருந்து பூவை மாத்திரம் பறிக்கின்ற பூக்காரன்போல் இருக்கவேண்டும்; மரங்களை வெட்டிச் சுடுகிற கரிகாரன்போல் இருக்கக் கூடாது. 'இந்தக் காரியத்தைச் செய்தால் எனக்கு என்ன ஆகும்?' என்று தீர விசாரித்து, கூடுமானால், பிறகு, அதைச் செய்ய வேண்டும்; கூடாவிட்டால் செய்யக் கூடாது. எந்தக் காரியத்தைச் செய்வதற்குத் தருணம் வரவில்லையோ, செய்தாலும் யத்தனம் வீணாகுமோ, அதைச் செய்யக் கூடாது.

ஸ்திரீகள் நபும்ஸகனைப் பர்த்தாவாக அடைய எப்படி விரும்பமாட்டார்களோ, அவ்விதமே, பிரசைகளும், எவன் பிரயோசன மில்லாத காரியங்களைச் செய்கிறவனோ, பிரயோசனமுள்ள காரியங்களைச் செய்யாது விடுகிறவனோ, மேலும் எவனுடைய கோபமும் சந்தோஷமும் பிரயோசன மற்றனவோ, அப்படிப்பட்டவன் அரசனாகவிருக்க விரும்பமாட்டார்கள். எந்தக்காரியத்திற்குப் பிரயத்தனம் குறைவோ, பயன் அதிகமோ, அந்தக் காரியத்தைப் புத்திமான் ஆலசியமில்லாமல் உடனே ஆரம்பித்துச் செய்யவேண்டும். எந்த அரசன் எல்லாவற்றையும் தன் ஞானக் கண்ணால் ஆழ்ந்து பார்க்கிறானோ, அவன் சும்மா உட்கார்ந்திருக்குங் காலத்திலும் பிரஜைகள் அவன்மீது பிரியமாக விருப்பார்கள். *சில விருக்ஷங்கள் அதிகமாகப் புஷ்பிக்கும்; ஆனால், காய்க்கமாட்டா. காய்த்தாலும் ஏறி அவற்றின் பயனைப் பெற முடியாது. அரிதில் ஏறிப் பறித்தாலும் காயாகவே இருக்கும்; பழுக்கமாட்டா. அந்த மரங்கள் போல இருக்கும் அரசன் கெடமாட்டான். கண்ணு, மனசு, வாக்கு, கிரியை இந்நான்குவகையாலும் எந்த அரசன் பிரஜைகளைச் சந்தோஷப்படுத்துகிறானோ, அந்த அரசன்மீது ஜனங்கள் விசுவாசஞ்செய்வார்கள்.

வேடனைப்பார்த்து மிருகங்கள் பயப்படுவதுபோல்எந்த அரசனைக் கண்டு குடிகள் பயப்படுகிறார்களோ, அவன் நாலு சமுத்திரத்திற்குட்பட்ட பூமிமுழுவதுக்கும் அரசனாக இருந்தாலும், சீக்கிரம் இராச்சியத்தை இழந்துவிடுவான். அதி

---

* இதன் கருத்து—அரசன் கொடுப்பது குறைவாக இருந்தாலும், விசுவாசம் அதிகம் வைக்க வேண்டும். அதிகமாகக் கொடுத்தாலும், பிறருக்குச் சுவாதீனமாகக் கூடாது. தான் துர்ப்பலனாக இருந்தாலும், பலசாலியைப் போல் காட்டவேண்டும்.

யாயஞ்செய்கிற அரசன், தகப்பன் பாட்டன் முதலான வமிசபாரம்பரியமாய் வந்த இராச்சியத்தை யடைந்தாலும், காற்றில் அகப்பட்ட மேகம் சிதறிப்போய்விடுவதுபோல, அவனுடையஇராச்சியம் அநியாயத்தினால் நாசமடைகிறது. ஆதிகாலம்முதல் பெரியோர் செய்துகொண்டு வந்த தருமத்தை நடத்துகிற அரசனுடைய இராச்சியத்தில், திரவியம், மேன்மேலும் விருத்தியாகிறது. தருமத்தைவிட்டு அதருமம் செய்கின்ற அரசனுடைய இராச்சியம் தணலிலிட்ட தோல் சுருங்குவதுபோல் சுருங்கிப்போய்விடும்.

சத்துருவின் ராஜ்யத்தை நாசப்படுத்துவதற்கு எவ்வளவு யத்தனம் செய்யவேண்டுமோ, அவ்வளவு யத்தனமும் தன்னிராச்சியத்தைக் காப்பாற்றுவதற்கும் செய்யவேண்டும். அரசன் தருமத்தாலேயே இராச்சியத்தை அடைய வேண்டும்; தருமமாகவே அந்தஇராச்சியத்தை ரக்ஷிக்க வேண்டும்; தருமத்தாற் கிடைத்த திரவியம் அழிவதுமில்லை, குறைகிறது மில்லை. கற்பாறையிலிருந்து பொன்னைத் தேடி எடுப்பதுபோல, பித்துப் பிடித்தவனுடைய பிதற்றலிலிருந்தும் குழந்தையின் மழலைப்பேச்சிலிருந்துங் கூட இதத்தை எடுத்துக்கொள்ளவேண்டும். ஒவ்வொரு நெல்லாக நெற்குவியலைச் சேர்ப்பதுபோல், அநேகபெரியோர்களிடத்திலிருந்து நல்ல பேச்சுக்களையும் நல்லசெய்கைகளையும் புத்திமான் சேர்க்கவேண்டும்.

பசுக்கள் மோப்பத்தினால் எளிதில் அறிகின்றன; பிராமணர்கள் வேதங்களால் தெரிந்துகொள்ளுகிறார்கள்; சாதாரண ஜனங்கள் கண்களால் அறிந்துகொள்ளுகிறார்கள்; அப்படியே, அரசர்கள் சாரர்களால் உணர்கிறார்கள்.

சுரப்புவிடுகிற பசு அடிபடுகிறதில்லை; கஷ்டப்பட்டுச் சுரப்பு விடும் பசுவைப் பால்கறக்கிறவர்கள் மிகவும் வருத்து

கிறார்கள். எந்தப்பொருள் நெருப்பில் வாட்டாமலே வளைக்க வருகிறதோ, அதை நெருப்பில் வாட்டுகிறதில்லை: எந்தப் பொருள் சுயமாகவே வளைந்திருக்கிறதோ, அதையும் வளைக் கிறதில்லை; கீழே சொன்னவற்றை உவமையாக வைத்துக் கொண்டு, புத்திமான் பலசாலியைக் கண்டு வணங்க வேணும்; அப்படிச்செய்வது, தேவேந்திரனுக்கே வணங் கினது ஆகும்.

பசுக்களைக் காப்பது மழை; ஆகையால், அது தான் அவைகளுக்குப் பந்துக்கள் போன்றது; அப் படியே, ராஜாக்களுக்கு மந்திரிகள்தாம் உறவினர்; ஸ்திரீகளுக்குப் பர்த்தாக்கள்தாம் ரக்ஷகர்கள்; பிரா மணர்களைக் காப்பாற்றுகிறவை வேதங்கள்தாம். தரு மம் சத்தியத்தாற் காப்பாற்றப்படுகிறது; வித்தை அப்பியா சத்தாற் காப்பாற்றப்படுகிறது; ரூபம் தேய்த்து ஸ்நானஞ் செய்வதனாலும் அழகிய சந்தனப்பூச்சுக்களினாலும் காக்கப் படுகிறது; குலம் நல்லொழுக்கத்தாற் காப்பாற்றப்படுகிறது; தானியம் அளந்துவைப்பதாற் காக்கப்படுகிறது; குதிரை கள் ஓடுவதால் காக்கப்படுகின்றன; தினந்தோறும் யஜமா மானன் பார்ப்பதால் மாடுகள் காப்பாற்றப்படுகின்றன; ஸ்திரீகள் விலைகுறைந்த வஸ்திரம் உடுப்பதனாற் காப்பாற் றப்படுகிறார்கள்.

நல்லகுலத்திற் பிறந்திருந்தாலும் நல்ல ஆசாரமில்லா விட்டால், அவன் யோக்கியனல்லன்; இழிவான குலத்திற் பிறந்திருந்தாலும் எவனிடத்தில் நல்லஆசாரம் இருக்குமோ, அவன்தான் மேலானவன். பிறருடைய திரவியம், ரூபம், வீரி யம், நல்ல குலத்திற் பிறப்பு, சுகம், ஐசுவரியம், மேன்மை என்ற இவைகளைக் கண்டு எவன் பொறாமைப்படுகிறானோ, அவனுடைய துக்கத்துக்கு முடிவு இல்லை. மனுஷ்யன்

அகாரியஞ்செய்வதைப்பற்றியும் நல்லகாரியங்களை விடுவதைப் பற்றியும் செய்த மந்திராலோசனை ஸமயத்திலே வெளி யாவதுகுறித்தும் பயமடையவேண்டும். புத்திபேதகமான பதார்த்தங்களை உட்கொள்ளக்கூடாது. வித்தை திரவியம் நற்குடிப்பிறப்பு என்ற இம்மூன்றும் அயோக்கியர்களுக்கு மதத்தை உண்டுபண்ணுகின்றன; அவைகளே சாதுக்களுக் குத் தமத்தை [அடக்கத்தை]த் தருகின்றன. யோக்கியர்கள் ஒரு சமயத்தில் அயோக்கியரை வேண்டினால், அவர் தம்மை யோக்கியரென்றெண்ணிக்கொள்ளுகிறார்கள். யோக்கியரைக் காப்பாற்றுகிறவர் யோக்கியர்தாம்; அயோக்கியரையும் யோக்கியர் காக்கிறார்கள். ஆனால், அயோக்கியரோ ஒரு போதும் எவரையும் காப்பாற்றுகிறதில்லை.

அழுக்கில்லாமற் சிறந்ததான வஸ்திரத்தை உடுத்த வன் சபையிலே மரியாதை அடைகிறான்; ஆடுமாடு உள்ள வனுக்குச் சாப்பாட்டின் சுவை பூர்ணமாகிறது; வாஹன முள்ளவனுக்கு வழியைக் கடப்பது சுகமாகிறது; நன் னடத்தையுள்ளவனுக்குச் சகலமும் சுகமாகின்றன. மனித னுக்கு நடத்தை தான் முக்கியமானது; அது எவனுக்குக் கெடுகிறதோ, அவன் கெட்டே போகிறான். அவன் பல காலம் பிழைத்தும், அவனுக்கு, திரவியமும் பந்துக்களும் இருந்தும் பிரயோசன மில்லை.

தனிகர்களுக்கு மாமிசமும், மத்திமர்களுக்கு [சாதா ரண ஜனங்களுக்கு]ப் பால் தயிரும், ஏழைகளுக்கு எண் ணெயும் இருந்தால் போசனம் உத்தமமாகும். ஏழைகள் தங்களுக்குக் கிடைத்த ஆகாரத்தை வெகுருசியாகச் சாப்பிடுகிறார்கள்; அவர்களுக்கு இருக்கும் பசியே ருசியை உண்டுபண்ணுகிறது; அந்தப்பசி தனிகர்களுக்கு இல்லை. மகாராஜாவே! உலகத்தில் வெகுவாய்த் தனிகர்களுக்கு நன்

ருய்ச் சாப்பிடுஞ் சக்தி இல்லை. தரித்திரர்கள் கட்டைகளைத் தின்ருலும் ஜரித்துக்கொள்கிருர்கள். தாழ்ந்த ஜனங்களுக்குப் பிழைப்பின் பயமும், மத்திமர்களுக்கு மரணத்தின்பயமும், உத்தமமனிதர்களுக்கு அவமானத்தின் பயமும் உண்டு. கள்ளு முதலான அநேக பதார்த்தங்களால் மதம் உண்டாகின்றது. அவைகளுக்குள் தனத்தால் தோன்றும் மதந்தான் மிகவும் நீசமானது; ஏனெனில், தனத்தால் வந்த மதம் தாரித்திரியம் வந்தாலொழிய நீங்குகிற தில்லை.

எவனுடைய பஞ்சேந்திரியங்களும் தன்னிடத்தில் அடங்காமல் சிற்றின்பங்களிற் பிரவேசிக்கின்றனவோ, அந்த மனுஷ்யன் நவக்கிரஹங்களால் நக்ஷத்திரங்கள் தாபமடைவதுபோல் தாபமடைவான். மனத்தைக் கெடுக்குந் தன்மையுள்ள பஞ்சேந்திரியங்களால் எவன் வெல்லப்படுகிருனே, அவனுக்கு [அதாவது-இந்திரியங்களின் சுவாதீனமாகும் மனிதனுக்கு], சுக்கிலபக்ஷத்தில் சந்திரன் வளர்வதுபோல், ஆபத்துக்கள் வளர்கின்றன. எந்த அரசன் தன்னுடைய மனத்தை ஜயிக்காமல் மந்திரிகளைச் சுவாதீனப்படுத்திக்கொள்ள விரும்புகிருனே, மந்திரிகள் சுவாதீனமில்லாத போது சத்துருக்களை ஜயிக்க விரும்புகிருனே, அவன் தானகவே குடிகளால் விடப்படுகிருன். முதலில் தன்னுடைய மனசையும் பின்பு அமைச்சர்களையும் சத்துருக்களாக எண்ணிச் சுவாதீனப்படுத்திக்கொண்டு, பின்பு தன் சத்துருக்களை ஜயிக்க யத்தனிக்க வேண்டும்; அந்த யத்தனம் வீணுகாது. தன் பஞ்சேந்திரியங்களைச் சுவாதீனமாக வைத்துக்கொண்டு மனசை அடக்கியும், குற்றவாளிகளுக்குத் தக்க தண்டனை விதித்தும் ஆராய்ந்து காரியங்களைச் செய்யும் புத்திமானுக்கு, அழியாத செல்வம் கிடைக்கிறது.

இந்தச் சரீரம் என்பது ஒரு ரதம்; ஆத்துமாதான் சாரதி [தேரோட்டுகிறவன்]; இந்திரியங்கள் குதிரைகள். சாரதி குதிரைகளை ஒழுங்காக நடத்தினால், ரதம் சரியான வழியிற் சென்று அவனுக்கும் சுகமுண்டாக்குகிறது. அடங்காத குதிரைகள் இடைவழியில் பாகனைக் கீழே தள்ளிக் கொன்றுவிடுவதுபோல், அடங்காத இந்திரியங்கள் ஜீவாத்துமாவைக் கொன்றும்விடும். மூர்க்கன் இந்திரியங்களுக்குச் சுவாதீனமாகி நல்லகாரியங்களைக் கெடுதலான காரியங்களாகவும், அகாரியங்களை நல்ல காரியங்களாகவும் எண்ணுகிறான். அதனால், அவன் துக்கத்தைச் சுகமென்று அறிந்து அனுபவிக்கிறான். எவன் தருமம் அருத்தம் என்ற இவைகளை விட்டு இந்திரியங்கள் போகும் வழியே செல்லுகிறானோ, அவன் ஐசுவரியம் பிராணன் திரவியம் மனைவி என்ற இவைகளையெல்லாம் இழக்கிறான். எவன் 'நான் திரவியத்துக்கு அதிபதியாயிருக்கிறேன்' என்று எண்ணி இந்திரியங்களை அடக்கா திருக்கிறானோ, அவன் அந்தப் பிழையினால் ஐசுவரியத்தை இழந்துவிடுகிறான். மனுஷ்யன், மனசு புத்தி இந்திரியங்கள் என்ற இவைகளைச் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு, தானாகவே உண்மையை அறியவேண்டும். ஒருவன் தனக்குத் தானே நண்பனும் சத்துருவும் ஆகிறான். எவன் உண்மையை அறிகிறானோ, அவனுக்கு அவனுடைய ஆத்துமாவே உறவினன்; அறியாதவனுக்கு அவனுடைய ஆத்துமாவே சத்துரு. அல்பமான [வலிவற்ற] வலையில் இரண்டு பெரிய மீன்கள் அகப்பட்டாற்போல், இந்தத்தேகத்தில் காமம் குரோதம் என்ற இவ்விரண்டும் சிக்கிக்கொண்டிருக்கின்றன. மீன்கள் அவ்வலையைக் கிழித்துவிடுவதுபோல், காமக்குரோதங்கள் புத்தியைக் கெடுத்துவிடுகின்றன; எவன் தருமத்தையும் அருத்தத்

தையும் நன்ருய் விசாரித்துப் பிறகு சத்துருக்களை ஜயிக்க வேண்டிய பொருள்களைச் சேகரிக்கின்ருனே, அவன் ஜயமடைவான்; எவன் தன் தேகத்துக்குள் இருக்கும் ஐந்து சத்துருக்களை ஜயிக்காமல் வெளியில் இருக்குஞ் சத்துருக்களை ஜயிக்க விரும்புகிருனே, அவனைச் சத்துருக்களே அவமதித்து விடுவார்கள். அநேக மகாத்துமாக்களும் இந்திரியங்களை அடக்காமையால் ஸம்ஸாரத்தில் அகப்பட்டுக் கொள்ளுகிருர்கள்; அப்படியே, அநேக அரசர்களும் அராசாட்சியின் இன்பத்தையே நாடிக் கஷ்டப்படுகிருர்கள்.

பாவஞ்செய்யாத சுத்தாத்துமாக்களும் பாவிகளைத் தள்ளிவிடாமல் அவருடன் கூடியிருப்பதால், தாமும் தண்டனையை அடைகிருர்கள்; அது உலர்ந்த விறகோடு சேர்ந்திருக்கும் ஈரவிறகும் எரிக்கப்படுவதுபோல ஆகும். ஆகையால், பாவிகளுடன் சேரக்கூடாது. ஐந்து ராஜ்யங்களை அபகரிக்க விரும்புகிற ஐந்து சத்துருக்களைப்போல், ரூபம் ரசம் சப்தம் கந்தம் ஸ்பரிசம் என்ற ஐந்து விஷயங்களை அடைவதற்காகப் பஞ்சேந்திரியங்களும் எதிர்பார்க்கின்றன; அவைகளை அடக்காமலிருக்கிறவனை ஆபத்து மூடிக் கொள்ளும். பிறருடையகுணங்களில் தோஷங் காணுமை விருக்கை, பிராமாணிகத்தன்மை, சுத்தி, ஸந்தோஷம், இனியபேச்சு, இந்திரியங்களையடக்குதல், ஸத்தியவசனம், உறுதி என்ற இவ்வெட்டுக்குணங்களும் துராத்துமாக்களிடத்தில் இரா. ஆத்துமஞானம், உறுதி, பொறுமை, தருமத்தில் விருப்பம், மிதமானபேச்சு, தானம் ஆகிய இந்தக் குணங்கள் நீசர்களிடத்தில்இரா. அயோக்கியர்கள், யோக்கியர்களைக் கடும்பேச்சுக்களாலும் நிந்திப்பதாலும் தொந்தரவு செய்கிருர்கள்; அதை யோக்கியர் பொறுக்கிருர்கள். பேசி

னவர்களுக்குப் பாவமும் பொறுத்தவர்களுக்குப் புண்ணியமும் கிடைக்கின்றன. அஸாதுக்களுக்குப் பிறரை இம்சிப்பதுதான், பலம்; அரசருக்குச் சேனைகளை வளர்க்கிறதே, பலம்; பர்த்தாவுக்குப் பணிவிடை செய்வதே, ஸ்திரீகளுக்குப் பலம்; குணவான்களுக்குப் பெருமைதான் பலம்.

ஓ திருதராஷ்டிரரே! பேச்சுச் சுருங்கியும் பொருளடங்கியுமுள்ள விசித்திரமான பேச்சுக்களைப் பேசுவதும், அஸாத்தியமென்று பண்டிதர்கள் சொல்கிறார்கள். நல்ல பேச்சுக்களால் நன்மை கிடைக்கிறது, கெட்ட பேச்சுக்களால் அநர்த்தம் விளைகிறது. அம்புகளால் அடிபட்ட சரீரம் தழும்பு மாறும்படி வளரும்; கோடாலியால் வெட்டப்பட்ட விருக்ஷமும் வெட்டுத் தெரியாதபடி மீண்டும் வளரும்; கொடிய வார்த்தைகளா லுண்டான காயமோ ஒரு போதும் மறைகிறதில்லை. தேகத்தில் பொத்தின பாணங்களை வெளியே எடுக்கலாம்; மனத்திற் பொத்தின கொடுஞ் சொற்களை வெளியே தள்ள முடியாது. கொடிய வார்த்தைகளென்னும் அம்புகள் வாயிலிருந்து வெளிவந்து பிறருடைய உயிர்நிலைகளிலே விழுகின்றன; அவைகளால் அடிபட்டவன் அல்லும் பகலும் விசனமடைகிறான்; ஆகையால், அறிவுள்ளவன் அவைகளைப் பிறர்மேற் பிரயோகிக்கக் கூடாது.

தேவர்கள் எவனைக் கெடுக்க வேணுமோ, அவனுடையபுத்தியை முதலிலே குறைக்கிறார்கள்; பிறகு, அவன் நீசகாரியங்களைச் செய்கிறான். எவனுக்குப் புத்தி கெட்டுப் போய் விநாசகாலம் நெருங்குகிறதோ, அவனுக்கு அந்யாயம் நியாயமாய்த் தோன்றுகிறது; அது அவனுடைய மனசைவிட்டு நீங்குகிற தில்லை. ஓ திருதராஷ்டிரரே! உம்

முடைய புத்திரர்களுக்குப் புத்தி போய்விட்டது; அதனால், பாண்டவர்களுக்கு விரோதஞ் செய்கிறார்கள். அவர்களுக்கு விநாசகாலம் சமீபித்திருக்கிறபடியால், அந்த எண்ணம் மாறவில்லை ; அதை நீர் அறியவில்லை. மூவுலகங்களையும் ஆள்வதற்குத் தகுதியுள்ள யுதிஷ்டிரர் உமக்குக் கீழ்ப் படிந்திருக்கிறார்; அவருக்கு இராச்சியத்தைக் கொடும். அவர் உம்முடைய புத்திரர்களைக் காட்டிலும் பாக்கியத்தி லும் தேஜஸிலும் புத்தியிலும் மிகுந்தவர்; தரும அர்த்தங்க ளின் உண்மையை யறிந்தவர். தருமபுத்தியுள்ள அவர், நல்ல சுபாவத்தாலும் தயையினாலும் உம்மிடத்தில் வைத்த மரியாதையாலும், நீர் செய்த உபத்திரவங்களைப் பொறுத் திருக்கிறார்.”

திருதராஷ்டிரன் சொல்லுகிறான்:—“ஓ பரமபுத்திமா னாகிய விதுர! நீ மிகவும் விசித்திரமாகப் பேசுகிறாய். இதைக் கேட்டு எனக்குப் போது மென்று தோன்றுகிற தில்லை. மறு படியும் தரும அருத்தங்களை யனுசரித்துப் பேசு.”

விதுரர் சொல்லுகிறார்:—“கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வதும் எல்லாப் பிராணிகளை யும் சமமாகப் பார்ப்பதும் இவ்விரண்டும்-சமமான புண் ணியத்தைத் தரும். நன்றாய் ஆலோசித்துப் பார்த்தால், இரண்டாவதே மேலான தென்று தோன்றுகிறது. மகா ராஜரே! புத்திரர்களிடத்தில், பக்ஷபாதம் செய்யாதேயும். பாண்டவர்களிடத்திலும் உம்முடையபுத்திரர்களிடத்தி லும் சமமாக இரும். இப்படிச் செய்தால், இவ்வுலகத்தில் கீர்த்தியையும், இறந்த பிறகு சுவர்க்கலோகத்தையும் அடை வீர். மனுஷ்யனுடைய கீர்த்தி இவ்வுலகில் எவ்வளவு காலம் இருக்குமோ, அவ்வளவுகாலம் அவன் சுவர்க்கலோகத்தில்

வசிப்பான். 'தன்னுடையது, பிறருடையது' என்று பக்ஷ பாதம்வைக்காமல் சமமாகப் பார்க்கவேணு மென்பதை விவரிக்கும்படி, கேசினி யென்னும் கன்னிகையின் விஷ யத்தில் விரோசனனுக்கும் சுதன்வாவுக்கும் நடந்த ஸம் வாதத்தைக் குறித்துப் புராதனஇதிஹாசம் ஒன்று சொல் லுகிறேன், கேளும்.

ரூபத்தில் நிகரில்லாத கேசினீ யென்னும் ஒருபெண், 'உத்தமமான பர்த்தாவை அடையவேண்டும்' என்ற அபிப் பிராயத்தால் தான் சுயம்வரம் நேர்ந்தாள். அந்தச்சுயம்வரத் துக்கு அநேகர் வந்திருந்தார்கள். அவரெல்லோரும் தகுந்த ஆசநங்களில் உட்கார்ந்திருந்தார்கள். 'அந்தப்பெண்ணை மணம் புரியவேண்டும்' என்று தைத்தியர்களுக்கு அதி பதியான விரோசனனும் அங்கு வந்திருந்தான். கேசினி விரோசனனைப் பார்த்து இவ்வாறு கேட்டாள்: "விரோசன! பிராமணர்கள் மேலானவரா? தைத்தியர்கள் மேலானவரா? எனக்குத் தோன்றுகிறது, பிராமணர்தாம் சிரேஷ்டர்கள் என்று; அப்படியானால், சுதன்வா ஏன் மஞ்சத்தில் உட்காரு கிறதில்லை?"

விரோசனன்:—"கேசினி! நாங்கள் காசியபப்பிரஜாபதி யின் புத்திரர்கள். இவ்வுலகம் முழுவதும் எங்களது; ஆகை யால், நாங்கள்தாம் மேலானவர்கள். தேவரும் பிராமண ரும் யாவர்? அவர் ஒருபொருட்டா?"

கேசினி:—"விரோசன! நீ சொல்லுவது சரி என்று எனக்குத் தோன்றவில்லை. நாம் இருவரும் இங்கே இருப் போம். நாளைக்காலையில் இங்குச் சுதன்வாவும் வருவான். அப் போது நான் உங்கள் இருவரையும் சாண்கிறேன்."

அதைக்கேட்ட விரோசனன், ''பெண்ணே மங்களமே! நீ பிராமணரைக் கண்டு பயந்திருக்கிறாய்; ஆகையால் தான், இப்படிப் பேசுகிறாய். அப்படியே ஆகட்டும். சுதன் வாவையும் என்னையும் நாளைக்காலையில் பார்ப்பாயாக'' என்றான்.

அன்று இரவொழிந்து சூரியன் உதித்த பிறகு, சுதன்வா, விரோசனனும் கேசினியும் இருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தான். அந்தப் பிராமணன் வந்ததைக் கேசினி பார்த்து, அவனுக்கு ஆஸனம் பாத்தியம் அர்க்கியம் என்ற இவற்றைக் கொடுத்தாள். அப்போது பிராமணனான சுதன்வா, அந்தப்பெண் தனக்குக் கொடுத்த உபசாரங்களைப் பெற்றுக்கொண்டு, ''விரோசனா! நானே பிராமணன்; இந்தச் சுவர்ணாசனத்தில் நீ உட்காரு'' என்று விரோசனனைப் பார்த்துச் சொன்னான்.

விரோசனன், ''பிராமண! நீயும் என்னாசனத்தில் உட்காருக'' என்றான். சுதன்வா, ''உன்னுடைய உத்தமமான சுவர்ணாசனத்தை என்கையால் தொடுகிறேன். அப்படி நான் செய்வது, உட்கார்ந்ததைக் காட்டிலும் அதிகம். நான் உன்னோடுகூடச் சமமாக ஒரே ஆசனத்தில் உட்காரமாட்டேன்'' என்றான்.

விரோசனன், ''பிராமண! நீ ஒருபலகை, தருப்பைக் கட்டு அல்லது தருப்பையால்முடைந்ததடுக்கு இவைகளில்தான் உட்காரத் தகுந்தவன்; பட்டு மேல்விரி பரப்பிய உத்தமமான இந்த ஆசனத்தில்உட்காரத் தகாதவன்தான்'' என்று பரிகாசஞ் செய்தான்.

சுதன்வா சொல்லுகிறான்: ''தகப்பனும் பிள்ளையும், இரண்டு பிராமணரும், இரண்டு க்ஷத்திரியரும், இரண்டு

கிழவரும், இரண்டு வைசியரும், இரண்டுசூத்திரரும் ஓர் ஆசனத்தில் உட்காரலாம். தன்னினத்தானல்லாதவனுடன் உட்காரக்கூடாது. நான் ஆசனத்தில் உட்கார்ந்திருந்தால், உன்தகப்பன் என்னுடன் உட்காராமல் கீழேதான் உட்காருவான். நீ வீட்டிலே செல்வமாய் வளர்ந்தவன்; குழந்தை; ஆகையால், உனக்கு ஒன்றும் தெரியாது."

விரோசனன்:—"என்னைக் காட்டிலும் நீ மேலானவனு? எங்கள் அசுரர்களிடத்திலிருக்கும் தங்கம் ஆடு மாடு குதிரைகள் முதலிய திரவியத்தைப் பந்தயம் வைக்கிறேன். இதை அறிந்தவர்களிடம் கேட்போம்" என்முன்.

சுதன்வா,"சுவர்ணம் மாடு குதிரை முதலியனஉனக்கே இருக்கட்டும். அவைகளுக்கு நான் எங்கே போவேன்? இருவரிடத்திலுமுள்ள பிராணனைப் பந்தயம் வைப்போம். இதை அறிந்தவரைக் கேட்போம், வா" என்முன்.

விரோசனன்:—"சரி! உயிரைப் பந்தயம்வைப்பது எனக்கும் சம்மதந்தான்; ஆனல், நான் தேவர்களிடத்திலும் மநுஷ்யர்களிடத்திலும் வரமாட்டேன்" என்று சொன்னன்.

சுதன்வா:—"உன் பிதாவினிடத்திலேயே போவோம்; அவன் புத்திரனுக்காகப் பொய் சொல்லமாட்டான்" என்முன்.

அதன்பின், அவ்விருவரும், பிரஹ்லாதனிடத்திற் சென்முர்கள். பிரஹ்லாதன், அவ்விருவரும் தன்னிடம் வருவதைப் பார்த்து, 'இதற்குமுன் ஒருபோதும் சேர்ந்திராத என் புத்திரனும் இந்தப் பிராமணனும் ஒன்றுகூடிக் கோபத்தாற் பாம்புபோல் சீறிக்கொண்டு வருகிமுர்களே! இதற்குக் காரணமென்ன?' என்று ஆலோசித்து, புத்திரனை நோக்கி, "விரோசன! முன் சேர்ந்திராத நீங்களிருவரும் சேர்ந்து வந்

திருக்கிறீர்களே;உனக்குச் சுதன்வாவுடன் என்னசிநேகம்?" என்று கேட்டான். விரோசனன், "எனக்குச் சுதன்வாவுடன் சிநேகம் ஒன்றுமில்லை. நாங்களிருவரும் பிராணனைப் பந்தயமாக வைத்து விவாதஞ் செய்துகொண்டிருக்கிறோம். பிரஹ்லாதரே! உம்மைக் கேட்கிறேன்; உண்மையைச் சொல்லுக; பொய்சொல்லவேண்டாம்" என்றான்.

இதைக்கேட்ட பிரஹ்லாதன் "இந்தப் பிராமணனைப் பூசிப்பதற்காக, சுத்தஜலம் பால் தேன் தயிர் பருத்தவெள்ளைப்பசு என்ற இந்தப் பதார்த்தங்களைக் கொண்டு வாருங்கள்" என்று தன் பரிசாரகருக்குக் கட்டளையிட்டான். சுதன்வா "பிரஹ்லாத! நான் கேட்கும் கேள்விக்குச் சரியான பதில் கொடுத்தால் எனக்கு மதுபர்க்கபூஜை செய்ததைக்காட்டிலும் அதிகம். பிராமணர்கள் பெரியோரா? அல்லது, விரோசனன் மேலானவனா?" என்று கேட்டான்.

பிரஹ்லாதன்:—"தருமமென்பது கறுப்பு அல்ல, வெள்ளையல்ல, நீலமல்ல; பச்சையுமல்ல. கத்திமுனையைக்காட்டிலும் கூர்மையானது. அதை எவனால் சொல்லமுடியும்? நீர் என்னால் வணங்கத் தகுந்தவர். என் புத்திரனோ அருமையானவன் ஒருவன்தான். நீங்கள் இருவரும் விவாதஞ்செய்துகொண்டு என்னைச் சாட்சியாகக் கோலிவிட்டீர்கள். என்னைப் போன்றவன் இதில் என்ன சொல்லலாம்?"

சுதன்வா:—"பிரஹ்லாத! நீர் நான் கேட்டகேள்விக்குப் பதில் சொல்லாமலிருந்தாலும் சரி, நியாய விருத்தமாய்ச் சொன்னாலுஞ் சரி, உமது தலை வெடித்துப்போம்" என்றான்.

பின்பு, பிரஹ்லாதன், சூரியனுடன் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் ஞானியான ஓர் அன்னப்பறவையைக்

கண்டு, "ஓஹம்ஸமே ! புத்திரனும் மற்ருெருவனும் சேர்ந்து ஒருவனைச் சாக்ஷியாகக் கோலினுல், எப்படித் தருமம் ஏற்படும்?" என்று கேட்டான். ஹம்ஸம், "புத்திரன்மேல் விசுவாச மிருந்தால், இராச்சியத்தைக் கொடும்; அல்லது, வேறு இஷ்டமான தனத்தைக் கொடும். இருவர் விவாதஞ் செய்து கொண்டு வந்தால், தான் அறிந்தபடிதான் சொல்ல வேண்டும்" என்று சொல்லிற்று.

பிரஹ்லாதன், "சாக்ஷியாகக் கோலப்பட்டவன் பேசாமலே யிருந்தாலும் பொய்பேசினுலும் எவ்வளவு பாவம் அவன் செய்ததாக ஆகும்?" என்று கேட்டான்.

ஹம்ஸம் சொல்லுகிறது:—"தருமம் எப்படி என்று கேட்கப்பட்ட போது, அதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் பசுமாடு காதை ஆட்டுவதுபோல் சும்மா இருந்துவிட்டால், அவன் செய்த தருமமெல்லாம் போய்விடும்; பரலோகமும் இல்லாமற் போம். இவ்வுலகில் அவனுடைய சந்ததி அழிந்துபோம். தனக்குத் தருமம் தெரிந்தும் சொல்லாம லிருப்பவர்களை, ஆற்றின்நீரோட்டம் கரையிலுள்ள மரங்களை வேரறுத்துத் தள்ளுவதுபோல், தருமம் கெடுத்துவிடும்; பாதிபாவம் நியாயாதிபதிக்கும், கால் பகுதிப் பாவம் செய்தவனுக்கும், சபையிலிருப்பவர்களுக்குக் கால் பகுதிப் பாவமும் சேரும். செய்ததைச் சரியாகச்சொன்னுல், நியாயாதிபதியும் சபையிலுள்ளாரும் பாவமடையமாட்டார்கள் ; செய்தவனைத் தான் அந்தப்பாவம் சேரும். தான் செய்த பாவத்தை யறிந்து தக்கபரிகாரம் செய்து கொண்டால், கர்த்தாவும் அந்தப் பாவத்தை அடையமாட்டான்" என்றது.

பிரஹ்லாதன் "ஓ ஹம்ஸமே! தெரியாமலோ வேண்டுமென்றே பொய்ச்சாக்ஷி அல்லது பொய்த்தீர்மானம்

சொன்னால், என்ன பாவத்தை அவன் அடைவான்?" என்று கேட்டான். ஹம்ஸம் சொல்லுகிறது:—"ஒரு பதி விரதையான ஸ்திரீ தன்பர்த்தா வேறுவிவாகஞ் செய்து கொண்டதை அறிந்தால், இராத்திரியில் எவ்வளவு துக்கம் அடைவாளோ, சூதாட்டத்தில் தோல்வி யடைந்தவனுக்கு என்ன துக்கம் நேரிடுமோ, கடுஞ்சுமையைச் சுமந்தவனுக்கு என்ன துக்கம் உண்டாகுமோ, அந்தத்துக்கங்கட்கெல் லாம் பொய்சொன்னவன் ஆளாவன். நகரத்தில் பிரவே சிக்காமல் தடுக்கப்பட்டும், பசியால் வருந்தியு மிருக்கும் போது அநேகசத்துருக்களாற் சூழப்பட்டு இருக்கிறவ னுக்கு எந்தத் துக்கம் நேரிடுமோ, அந்தத் துக்கம் பொய்ச் சாக்ஷி சொன்னவனுக்கு நேரிடும். பசுஜாதிக்காகப் பொய் சொன்னவன் பத்துமனுஷ்யர்களைக் கொன்ற பாபத்தை யும், குதிரைக்காகப் பொய்சொன்னவன் நூறுபேர்களைக் கொன்ற பாபத்தையும், புருஷனைப்பற்றிப் பொய்சொன் னவன் ஆயிரம்மனுஷ்யர்களைக் கொன்ற பாபத்தையும், சுவர்ணத்துக்காகப் பொய் சொன்னவன் இப்போது பிறந்த வர்களையும் இன்னும் பிறக்கப் போகிறவர்களையும் கொன்ற பாபத்தையும், பூமிக்காகப் பொய்சொன்னவன் முழுப்பூமி யையும் அழித்த பாபத்தையும் அடைவார்கள்" என்று சொல்லிற்று.

ஆகையால், திருதராஷ்டிர ! பூமிக்காகப் பொய் சொல் லாதேயும்.

பிரஹ்லாதன் இதைக் கேட்டு, விரோசனனைப் பார்த்து, "விரோசன! அங்கிராரிஷி என்னைக் காட்டிலும் சிரேஷ்டர். சுதன்வா உன்னைக்காட்டிலும் மேலானவன் ; இவனுடைய தாய் உன் தாயைக் காட்டிலும் மேலானவள்; ஆகையால், சுதன்வாவால் நீ வெல்லப்பட்டாய். உன்னுடைய உயிருக்

குச் சுதன்வா யஜமானனுக இருக்கிருன்" என்று சொல்லி, சுதன்வாவைப் பார்த்து, "சுதன்வா! என் புத்திரனுகிய விரோசனனைக் காப்பாற்றவும், கொன்றுவிடவும் உமக்கு அதிகார மிருக்கிறது. ஆகையால், நீர் தயைசெய்து அவனை எனக்குத் தானம் கொடுக்கவேணும்" என்ருன்.

சுதன்வா, "பிரஹ்லாத! நீர் புத்திரன்மேல்அன்புகொண்டு பொய்சொல்லாமல் தருமத்தையே சொன்னபடியால், உம் புத்திரனுடைய பிராணனைக் கொடுக்கிறேன். நான் அவனைக் கொல்லுகிற தில்லை. இந்தவிரோசனனை உமக்குத் தானமாகக் கொடுத்திருக்கிறேன். இவன் என்னெதிரில் கேசினியினுடைய * கால்களுக்கு மஞ்சள் பூசட்டும்" என்று சொன்னுன்.

ஆகையால், திருதராஷ்டிர! புத்திரரிடத்திலே பக்ஷபாதத்தினல் இராச்சியவிஷயத்திற் பொய்சொல்லாதேயும். பொய்சொல்லிப் பாண்டவர்களுக்கு இராச்சியமில்லையென்று சொன்னுல், நீரும் உம்முடைய புத்திரரும் மந்திரிகளும் நாசமடைவீர்கள். மாடுமேய்க்கிறவர்கள் தம்கையில் கோல் எடுத்துக்கொண்டு மாடுகளைக் காப்பாற்றுவதுபோல் தேவர்கள் ஜனங்களைக் காப்பாற்றுகிற தில்லை. அவர் எவனைக் காப்பாற்ற விரும்புகிருர்களோ, அவனுக்கு நல்ல புத்தியைக் கொடுக்கிருர்கள்.

மனுஷ்யன் எப்படி எப்படி தருமத்தில் மனத்தைச் செலுத்துகிருனோ, அப்படியப்படி அவனுடைய காரியங்களெல்லாம் அவனுக்குக் கைகூடுகின்றன; இதில் சந்தேகம் இல்லை. கபடமாகக் காரியஞ்செய்யும் மாயாவியை, அவன்

---

*நலங்கிடட்டு மென்று அருத்தம். உம்புத்திரனை நான் அழைத்துக் கொண்டுபோய்க் கேசினியினுடைய விவாகத்தைச் செய்துவைக்கிறேன் என்று கருத்து.

படித்த வேதம், பாவத்திலிருந்து காப்பாற்றமாட்டாது: ஆனால், சிறகுமுளைத்த பறவைகள் கூடுகளைவிட்டுப் பறந்து ஓடிப்போவதுபோல், மரணகாலத்தில் அந்தவேதம் மாயாவியை விட்டுவிடும். கள்ளுண்டல், கலகம், கூட்டத்தோடுதுவேஷம், கணவனையும் மனைவியையும் பிரித்துவிடுகை, ஞாதிகளைப்பிரிகை, அரசனுடன் பகை, துர்மார்க்கடத்தை ஆகிய இவைகளை விடவேண்டும். *சாமுத்திரிகசாஸ்திரம் சொல்லுகிறவனையும், முதலில் திருடனாகவிருந்து பிறகு வியாபாரம் செய்பவனையும், கண்கட்டிவித்தைக்காரனையும், வைத்தியனையும், சத்துருவையும், சிநேகிதனையும், நட்டுவர்களையும் ஆகிய ஏழுமனுஷ்யர்களையும் சாட்சியாக ஏற்றுக்கொள்ளக்கூடாது.

அக்னிஹோத்திரம், மௌனவிரதம், வேதாத்தியயனம், யாகம் ஆகிய நான்குகாரியங்களையும் விதிப்படி செய்தால், அவைகள் க்ஷேமத்தை உண்டுபண்ணும்; விதிதவறிச் செய்யப்பட்டால், கெடுதலை உண்டுபண்ணும். பிறர் வீட்டிற் கொள்ளி வைப்பவன், விஷங்கொடுக்கிறவன், கூட்டிக்கொடுக்கிறவன், ஸோமலதைவிற்பவன், போர்க்கருவிகளைச்செய்பவன், கோள்சொல்லுகிறவன், மித்திரத்துரோகஞ்செய்கிறவன், பிறர்ஸ்திரீகளைக்கைப்பிடித்து இழுப்பவன், கர்ப்பத்தைக்கெடுக்கிறவன், குருபத்தினியுடன் சேர்பவன், பிராமணனாக இருந்து கட்குடிக்கிறவன், மிகக் கடுமையானவன், காக்கை புண்ணின்மேற் குத்துவதுபோல் பிறர் துக்கப்படும்போது மேலும் துக்கமுண்டாக்குகிறவன், பரலோகமில்லையென்று நினைத்தவன், வேதத்தைத் தூஷிக்கிறவன், கிராமபுரோஹிதன், உபநயன

*கைரேகையைப் பார்த்து அவனது அதிருஷ்டத்தைத் தெரிவிக்குஞ் சாஸ்திரம்.

மில்லாமல் வேதம்படித்தவன், ஒருவன் தன்னைக்காப்பாற்ற வேணுமென்று கேட்டபோது ரக்ஷிக்கச் சக்தியிருந்தும் இம்சைசெய்கிறவன் இவர்கள் எல்லாம் பிரமஹத்திசெய் தவருக்கு ஒப்பானவர்கள்.

இருட்டில் இருக்கும் பதார்த்தம் திருணத்தைக் கொளுத்தினல் தெரியும்; ஒருவனுடைய தருமம் அவனுடைய நடத்தையால் தெரியும். பேச்சால் சாதுவை யறியவேண்டும்; பயம் நேரிட்டபோது சூரனுடைய சூரத்தனத்தை அறியவேண்டும்; தைரியசாலியினுடைய தைரியத்தைப் பஞ்சகாலத்தில் அறியவேண்டும்; ஆபத்து நேரிட்டபோது சத்துருவையும் மித்திரனையும் அறியவேண்டும். கிழத்தனம் ரூபத்தையும், ஆசை தைரியத்தையும், மிருத்யு பிராணனையும், பொறுமை தருமத்தையும், கோபம் ஐசுவரியத்தையும், அயோக்கியனுடைய ஊழியம் நன்னடக்கையையும், காதல் வெட்கத்தையும், கருவம் எல்லாநற்குணங்களையும் கெடுத்துவிடும். கோபிக்குத் திரவியமில்லை; உபத்திரவப்படுத்துகிறவனுக்குச் சிநேகிதன் இல்லை; குரூரனுக்கு ஸ்திரீ இல்லை; சுகத்தை அபேக்ஷிக்கிறவனுக்கு வித்தையில்லை; காமிக்கு வெட்கம் இல்லை; ஆலசிய முள்ளவனுக்கு ஐசுவரியமில்லை; சஞ்சலசித்தனுக்கு ஒன்றுமே இல்லை. நற்காரியங்களைச் செய்வதால் செல்வம் கிடைக்கிறது, கெட்டிக்காரத்தனத்தால் அது விருத்தியாகிறது; சாமர்த்தியத்தால் வளர்ந்தசெல்வம் வேரூன்றுகிறது; இந்திரியங்களை யடக்குவதால் அது ஸ்திரமாகிவிடுகிறது. புத்தி, நற்குலத்திற் பிறப்பு, அடக்கம், படிப்பு, பராக்கிரமம், மிதமான பேச்சு, சக்திக்குத்தக்கபடி தானம், நன்றியறிதல் ஆகிய எட்டுக் குணங்களும் புருஷனுக்கு மேன்மையை யுண்டுபண்ணுகின்றன. மஹாராஜ! இன்னும் ஒரு பெரியகுணம் இருக்கிறது.

அது இருந்தால் இந்தக் குணங்களெல்லாம் மேலாகத் தெரியும்: அது என்னவென்முல், அரசனுடைய பிரீதி. சுவர்க்கத்தை அடையப்போகும் மனுஷ்யனுக்கு எட்டுக்குணங்கள் அடையாளம். அவைகள்—யாகம், தானம், வேதாத்தியயனம், தபசு, அடக்கம், சத்தியம், ஸமதை, தயை என்பன. இவைகளில் முதல்நான்குகுணங்கள் தாமாகவே சாதுக்களை அநுசரிக்கின்றன; மற்றைய நான்கு குணங்களைச் சாதுக்கள் அநுசரிக்கிமுர்கள். தருமத்தை அடைவதற்கு வழி எட்டு உண்டு. அவை-யாகம், அத்தியயனம், தானம், தபசு, ஸத்தியம், பொறுமை, தயை, பிறர் பெருளை இச்சியாமலிருப்பது என்பவை. இவைகளில் முதல் நான்கை டம்பத்துக்காகவும் சிலர் மேற்கொள்வார்கள். பின் நான்குகுணங்களும் மஹாத்துமாக்களிடத்தில்தான் இருக்கும். வயதுசென்றவரில்லாத சபை சபையாக மாட்டாது; தருமமறியாதவர்கள் கிழவர்க ளாகார்; சத்தியமில்லாத தருமம் தரும மாகாது. கபடத்தோடுகூடிய சத்தியம் சத்திய மாகாது. சத்தியம், ரூபம், வணக்கம், படிப்பு, நற்குலப்பிறப்பு, நல்லசுபாவம், பலம், தனம், சூரத்தனம், சமத்காரப்பேச்சு ஆகிய பத்துக்குணங்களும் சுவர்க்கத்துக்குக் காரணமானவை.

பாவஞ்செய்தவனுக்கு அபகீர்த்தி கிடைக்கிறது; அன்றியும், அவன், பாவத்தின் பயனுகிய துக்கத்தை யனுபவிக்கிமுன். புண்ணியஞ்செய்தவனுக்கு நல்ல கீர்த்தி கிடைக்கிறது; அன்றியும், அவன், புண்ணியப்பயனுகிய சுகத்தை அனுபவிக்கிமுன். ஆகையால், விரதானுஷ்டானம் முதலிய புண்ணியத்தைத்தான் செய்யவேண்டும்: பாவத்தைச் செய்யக்கூடாது. பாவம் புத்தியைக் கெடுத்துவிடுகிறது ; புத்தி போனுலோ, மறுபடி பாவத்தையே நித்தியம் செய்வான்.

புண்ணியம் புத்தியை விருத்திசெய்கிறது ; புத்தி விருத்தியானால், மறுபடி அதையே நித்தியம் செய்வான். புண்ணியஞ் செய்கிறவன் கீர்த்தியை யடைந்து, நல்ல லோகங்களையும் அடைகிருன். ஆகையால், உறுதியாகப் புண்ணியத்தைத்தான் செய்யவேண்டும். அசூயைப்படுகிறவனும், மருமங்களை உடைக்கிறவனும், கடுமையாகப் பேசுகிறவனும், மோசஞ் செய்கிறவனும், தன் பாவத்தால் சீக்கிரத்தில் பெருஞ்சங்கடத்தை யடைகிருர்கள். அசூயையில்லாதவனும் நல்லபுத்தியுள்ளவனும், தம்முடைய நற்செய்கைகளால் யாதொரு சங்கடத்தையும் அடையாமல், எல்லாருக்கும் பிரியமாகிருர்கள். எந்த மனுஷ்யன் புத்திமான்களிடத்திலிருந்து நல்ல புத்தியைக் கிரகிக்கிருனே, அவன் தான் பண்டிதன் ; புத்தியைச் சம்பாதித்தவன் அதிக சுகமடைவான்.

எதனல் இராத்திரிகாலத்தில் சுகமாக இருப்பானே, அந்தக்காரியத்தைப் பகலிலேயே செய்யவேண்டும் ; எதனல் வருஷம் முழுமையும் சுகமாக இருப்பானே, அந்தக் காரியத்தை எட்டுமாதங்களிலேயே செய்யவேண்டும் ; எதனல் கிழத்தனத்தில் சுகமாகவிருப்பானே, அந்தக் காரியத்தைச் சிறுவயதிலேயே செய்யவேண்டும். இறந்த பிறகு எதனல் சுகமடைவானே, அந்தக்காரியத்தைத் தான் பிழைத்திருக்கும் போதே செய்யவேண்டும்.

உண்ட உணவு ஜரித்த பிறகு உணவையும், யௌவனம் நீங்கின பிறகு மனைவியையும், யுத்தத்தில் ஜயித்தபிறகு சூரனையும், தபசின் கரைகண்ட பிறகு தவஞ்செய்தவனையும் புகழவேண்டும். அதருமத்தால் அடைந்த திரவியத்தால் ஒருதுவாரத்தை மூடினல், மற்றொரு துவாரம் உண்டாகும்; அந்தத் துவாரம் அடைக்கமுடியாமல் இருக்

கும். யோக்கியர்களைச் சிக்ஷிக்கிறவர் அவர்களுடைய குரு; அயோக்கியர்களைச் சிக்ஷிக்கிறவன் அரசன்; இரகசியத்தில் பாவஞ் செய்தவர்களைச் சிக்ஷிக்கிறவன் யமன். ரிஷிகள் நதிகள் பெரியோர்களின்வமிசங்கள் ஸ்திரீகளின்அயோக்கியதை இவைகளின் சோதனையைப் புத்திமான் செய்யக் கூடாது. பிராமணரைப் பூசிக்கிறவனும் கொடையாளியும் ஞாதிகளிடத்தில் ஸமதிருஷ்டிவைத்தவனும் நல்லசுபாவமுடையவனுமான க்ஷத்திரியன், வெகுகாலம் இராச்சியம் ஆளுவான். பூமியிலே, எங்கும் தங்கம் பூத்து நிரம்பியிருக்கிறது. அதைப் பிரித்துச் சேர்க்கத்தெரிந்தவர்கள், சூரன் வித்துவான் ஊழியஞ் செய்யத்தெரிந்தவன் ஆகிய இம்மூவர் தாம். புத்தியால் செய்யுங் காரியம் உத்தமம்; கைகளால் செய்யுங் காரியம் மத்திமம்; காலால் செய்யுங் காரியம் [அதாவது-நடந்துசெய்யும் காரியம்] அதமம்; சுமந்து செய்யுங் காரியமோ மகாநீசம்.

ஓ திருதராஷ்டிரரே! மூடர்களான துரியோதனன், சகுனி துச்சாசனன் கர்ணன் என்ற இவர்களிடத்தில் இராச்சியத்தை ஒப்பித்துவிட்டு க்ஷேமம் கிடைக்கவேண்டுமென்று எப்படி இச்சிக்கிறீர்? பாண்டவர்கள் எல்லாநல்ல குணங்களாலும் நிரம்பினவர்கள். அவர்கள் உம்மைத் தகப்பனாராக எண்ணி யிருக்கிறார்கள், அவர்களை நீர் புத்திரரைப்போல் நடத்தும்''

மறுபடியும் விதுரர் சொல்லுகிறார்: ''தருமவிஷயத்தில் ஆத்திரேயருக்கும் ஸாத்தியர்களுக்கும் நடந்த புராதன இதிஹாசம் ஒன்று இருக்கிறது, அதைச் சொல்லுகிறேன், கேளும்.

ஆத்திரேயமகாரிஷி அதிக நியமமுள்ள சன்னியாஸத்தி லிருந்தார்: ஸாத்தியர் என்னும் தேவர்கள் அவ

ரைப்பார்த்துப் பிரசன்னமாகி, "ஓ ஆத்திரேயரிஷியே! நாங்கள் சாத்தியதேவர்கள்; படிப்பிலும் தைரியத்திலும் புத்தியிலும் உம்மைப்போல வேறொருவரும் இல்லே. ஆகையால், நீர் எங்களுக்கு நல்ல உபதேசம் செய்யவேணும்" என்றூர்கள்.

சன்னியாசி சொல்லுகிறூர்: "தேவர்களே! நான் குருவினிடத்திலிருந்து தெரிந்துகொண்டது இதுதான். தைரியமாயும் பொறுமையாயும் இருக்கவேணும். ஸத்தியமும் தருமமும் தவறக்கூடாது. எல்லாப் பிராணிகளேயும் சுகதுக்க விஷயத்தில் தன்னேப்போல் எண்ணவேண்டும். தேகம் ஆத்துமா என்ற விஷயத்திலிருக்குஞ் சந்தேகத்தைப் போக்க வேண்டும்; ஒருவன் தன்னே வைதால் அவனேப் பதிலுக்கு வையக்கூடாது; இப்படிப் பொறுத்தவனுடைய பொறுமை வைதவனே எரித்துவிடும்; பொறுத்தவன் புண்ணியத்தையும் அடைவான். பிறரை வையக்கூடாது; அவமானஞ் செய்யக்கூடாது. மித்திரனுக்குத் துரோகம் செய்யக் கூடாது. நீசனிடத்தில் ஊழியஞ் செய்யக்கூடாது. கருவமடையக்கூடாது. நீசவிருத்தி செய்யக்கூடாது. துவேஷமாயும் கோபமாயும் பேசக்கூடாது. கடும்பேச்சுகள், மனுஷ்யனுடைய உயிர்நிலேகளேயும் எலும்புகளேயும் பிராணனேயும் கொளுத்துகின்றன. ஆகையால், தருமிஷ்டன் கடுமையான பேச்சை எப்போதும் பேசக்கூடாது. எவன், கடுமையாகி மருமங்களேப்பேதிக்கின்ற வசனமென்னும் பாணங்களால் பிறரைத் தாட்சிணியமில்லாமல் அடிக்கிறூனே, அவனே அவலக்ஷமியின் இருப்பிட மென்றும் அவன் வாயில் நரகம் இருக்கிற தென்றும் அறியவேண்டும். அக்கினிக்கும் சூரியனுக்கும் சமமான வாக்கு அம்புகளிஞல் அயோக்கியன் சாதுவைப்பொத்திஞல், சாதுவானவன் "அவன்என்னே

நிந்தித்ததனுல், நான் பெருமையடையும்படி ஆயிற்று. அதனுல், அவன் எனக்குப் புண்ணியம் விருத்தியாகும்படி செய்தான்" என்று எண்ணவேணும். ஒருவன் யோக்கியனேயோ அயோக்கியனேயோ தபஸ்வியையோ அல்லது திருடனேயோ, எவனே எப்போதும் சேர்ந்திருக்கிருனே, அவன், வஸ்திரமானது பதார்த்தங்களுடைய குணத்துக்குத் தக்கபடி நிறத்தை அடைவதுபோல், தன்னுற் சேவிக்கப்பட்டவனுடைய குணத்தை அடைகிருன். எவன் தன்னே அப்பிரியமான வார்த்தைகளேப் பேசினவனுக்கும் பதில்வார்த்தை பேசமாட்டானே, தன்னே யடித்தவனேயும் பதில் அடிக்க மாட்டானே,பாவியைக்கூடக் கொல்லஇச்சிக்கமாட்டானே, அவனிடத்தில் தேவர்களும் விசுவாசஞ் செய்வார்கள். பிழையாகப் பேசுவதைக் காட்டிலும் மௌனம் நல்லது; மௌனத்தைக் காட்டிலும் பிரியம் பேசுவது நல்லது; அதைப் பார்க்கிலும் ஸத்தியம் பேசுவது உத்தமம்; எல்லாவற்றைப் பார்க்கிலும் தருமமாகப் பேசுவது மிகவும்உத்தமம். மனுஷ்யன் எத்தன்மையுள்ளவருடன் சகவாசஞ் செய்கிருனே, எவஸ்ரச் சேவிக்கிருனே, எவரைப்போல ஆக விரும்புகிருனே, அப்படியே ஆகிருன். எவ்வெவற்றை விட்டுத் தூரத்தில் விலகுகிருனே, அவ்வவைகளிலிருந்து துன்பப்படாது ஒழிகின்ருன். எல்லாவற்றையும் விட்டு ஒழிந்தால், கொஞ்சமேனும் துக்கம் அடையமாட்டான். எவன் பிறரால்ஜயிக்கப்பட முடியாதவனே, அவன் பிறரை வெல்ல முயலமாட்டான். எவன் பிறரால் அடிக்கப்பட்டாலும் துவேஷஞ் செய்யமாட்டானே, அவன் அன்னியரைக் கொல்ல விரும்பமாட்டான். தன்னே ஒருவன் நிந்தித்தாலும் புகழ்ந்தாலும் சமமாக எவன் எண்ணுகிருனே, அவன் விசனப்படுகிறதும் இல்லே, சந்தோஷப்படுகிறதும் இல்லே.

எவன் எல்லாருடைய க்ஷேமத்தையும் இச்சிக்கிருனோ, கெடுதலை விரும்புகிற தில்லையோ, சத்தியம் பேசுகிருனோ, தயையுள்ளவனோ, இந்திரியங்களை அடக்கினவனோ, அவன் தான் உத்தமபுருஷன். எவன் கொடாமல் சமாதானப் பேச்சைமாத்திரம் செய்யமாட்டானோ, பிரதிஞ்ஞை செய்த பிறகு கட்டாயமாய்ப் பிரதிஞ்ஞையின்படியே கொடுப்பானோ, அன்னியனுடைய துக்கத்தை அறிவானோ, அவன் மத்திமபுருஷன். துச்சாஸனனைக் கந்தருவர்கள் கதாயுதத்தால் அடித்தார்கள்; பாணங்களாற் பிளந்தார்கள். அவனால் துரியோதனனை மீட்கமுடியவில்லை;பாண்டவர்கள் அவனைக் காப்பாற்றினார்கள். இப்படியிருக்க, அந்தத்துரியோதனன் பாண்டவர்களுடைய உபகாரத்தை நினையாமல், அவர்கள் மேல் கோபிக்கிருன்; அவன் யாருக்கும் மித்திர னல்லன். அவனைப்போன்றவர்கள் அதமபுருஷர்கள். எவன் தான் அயோக்கிய னானபடியால் தன்னைப்போலவே அன்னியரும் இருப்பா ரென் றெண்ணி அவர்களை நம்புகிறதில்லையோ, மித்திரர்களை நிராகரிக்கிருனோ, அவன் அதமபுருஷன். எவன் தனக்கு ஐசுவரியத்தை விரும்புகிருனோ, அவன் உத்தமபுருஷர்களைத் தான் ஆச்சிரயிக்கவேண்டியது. சமயம் நேரிட்டபோது, மத்திமரை விரும்பவேண்டும்; ஆனால், அதமரை ஒருபோதும் ஆச்சிரயிக்கக்கூடாது. வலிமை, முயற்சி, புத்தி, பராக்கிரமம் இவைகளைக் கெட்டவிதமாக உபயோகித்தால் மனம் கெட்டுப்போம்; அன்றியும், அப்படிச் செய்கிறவன் பெரியோர்களுடைய ஸமதையையும் கீர்த்தியையும் அடையமாட்டான்.

திருதராஷ்டிரன் கேட்கிருன்: "தருமம் அர்த்தம் இவைகளில் தேறின தேவர்கள்கூட உயர்குலத்திற் பிறப்பை விரும்புகிருர்கள். விதுர! நான் உன்னைக் கேட்கிறேன்; மகாகுல மென்பவை யாவை? எனக்குச் சொல்லு."

விதுரர்:—“ தபசு, இந்திரியங்களை அடக்குதல், வேதாத்தியயனம், பொறுமை, யாகங்கள், சமாதானம், விதிப்படி விவாகம், இடைவிடாத அன்னதானம் ஆகிய இவ்வெட்டுக் குணங்களும் எந்தக்குலங்களில் இருக்கின்றவோ, அவை தாம் மகாகுலங்கள். எவர்களுடைய நடத்தை நல்லதோ, தாய் தந்தையர் சுத்தர்களோ, தாக்ஷிணியத்துக்கு அல்லாமல் மனப்பூர்த்தியாகவே தருமஞ் செய்கிறார்களோ, தம்குலத்தார் அடைந்ததைவிட அதிகமாகக் கீர்த்தியைத் தாம் அடைய விரும்புகிறார்களோ, பொய்யை நீக்கியிருக்கின்றார்களோ, அப்படிப்பட்டவர்கள் இருக்கின்ற குலந்தான் நல்ல குலம். யாகங்களைச்செய்யாமையாலும், அயோக்கியமான விவாஹங்களைச் செய்துகொள்வதனாலும், வேதங்களைவிடுவதனாலும், தருமத்தை மீறுவதனாலும் தேவாலயத்திரவியத்தையும் பிராமணத்திரவியத்தையும் அபஹரிப்பதனாலும், பிராமணரை மீறுவதனாலும், நற்குலங்கள் கெடுகின்றன. பிராமணரை அவமதிப்பதாலும், அவரை நிந்திப்பதாலும், அவர்கள் நம்பிக்கையாகத் தங்களிடத்தில் வைத்த பொருளை அபகரிப்பதாலும், குலங்கள் கெடுகின்றன. குலங்களில் வித்யை, சத்புருஷர்கள், தனம் இவை ஏராளமாக இருந்தாலும், நன்னடத்தை யில்லாவிட்டால், அவை, நற்குல மென்ற பெயரை அடையமாட்டா. திரவிய மில்லாவிட்டாலும் நன்னடத்தைமாத்திரம் இருந்தால், அந்தக்குலம் அதிகீர்த்தியைப் பெறும். மிகவும் பிரயத்தனப்பட்டாவது நல்லொழுக்கத்தைக் காப்பாற்ற வேண்டும். திரவியம் ஒருசமயம் போகும், மற்றொரு சமயம் வரும்; திரவியம் குறைந்தவன் குறைந்தவனல்லன் ; நடத்தை குறைந்தால் அவன் இறநதவன்தான். நல்லொழுக்கமில்லாத குலங்கள், ஆடுமாடுகள் குதிரைகள் செழிப்பானபயிர் இவைகளைப் பெற்றிருந்தாலும் விருத்தி

அடையமாட்டா. திருதராஷ்டிர! நம்முடைய வமிசத்தில் பிறருடன் வைரஞ்செய்பவனும் நியாயத்துக்குக் கட்டுப்படா தவனும் பிறர்பொருளை அபகரிப்பவனும் மித்திரத்துரோ கஞ் செய்பவனும் கபடமுள்ளவனும் கோபக்காரனுமாகிய ராஜா இருக்கவேண்டாம்; இவன் குலத்துக்குக் கேடான வன். பிராமணரைக் கொல்லுகிறவனும், அவரைத் துவே ஷிக்கிறவனும், யுத்தத்துக்குப் போகாமல் சாகுபடி செய் பவனுமாகிய ராஜா நம்முடைய வமிசத்திற் பிறக்கவேண் டாம். பிறர் கொண்டாடும்படி பெரியோரை ஸத்கரிக்கும் நல்ல குணமுள்ளவர்களே உண்டாகக்கடவர். பெரியோரை ஸத்காரஞ்செய்யத் திரவியம்வேண்டு மென்பது இல்லை; திருணத்தை அல்லது பூமியை ஆசனமாகக் கொடுத்தால் போதும்; ஆகாரத்துக்கு ஜலம் கொடுத்தால் போதும்; அல்லது பிரியமாக நல்வரவு வினவினலும் போதும். ஸத்துக் களுடையவீட்டில் மேற்சொன்ன மரியாதைகளுக்கு யாதொருகுறைவு மில்லை. பெரியோர்கள் வருகிறவர்களை ஆதரிக்க மேற்சொன்ன பதார்த்தங்களை நிச்சயமாய்ச் சித் தப்படுத்தி யிருக்கிருர்கள். மரத்தாற்செய்த ரதம் லகுவா யிருந்தாலும், பாரத்தைச் சுமக்கும். அந்தப் பாரத்தைத் தான் விருக்ஷங்கள் சுமக்கமாட்டா. இவ்விதம் சாமர்த்திய முள்ளவர்கள் காரியங்களைச் செய்வார்கள்; மற்றவர்களால் அவைகளைச் செய்ய முடியாது. எந்த மித்திரனுடைய கோபத்தால் பயமுண்டாகிறதோ, எவனருகிற் செல்வ தற்கும் ஸம்சய முண்டாகுமோ, அவன் மித்திரன் அல் லன். எவனைத் தகப்பனைப்போல் எண்ணி நம்பலாமோ, அவன்தான் நிஜமான மித்திரன். மற்றவர் தம்முடைய காரியத்துக்காக நம்முடன்சேர்ந்தவர்கள். எவன் யாதொரு சம்பந்தமும்இல்லாதபோது சினேகமாக இருக்கிருனே

அவன்தான் பந்து ; மித்திரன் : ரக்ஷகன் . ஆச்சிரயம் : எல்லாமுமாவான். சஞ்சல சித்தன், பெரியோரை ஆச்சிரயிக்காதவன், பித்துப்பிடித்தவன் ஆகிய இவர்களை மித்திரர் சேரமாட்டார்கள். ஜலமில்லாமல் உலர்ந்துபோன குளத்தில் அன்னப்பறவைகள் வராதது போல், சஞ்சல சித்தனும் இந்திரியங்களுக்குச் சுவாதீனமானவனுமாகிய மனிதனிடத்தில் ஐசுவரியம் சேர்வதில்லை. காரணமில்லாமலே கோபிப்பதும் பிரசன்னராவதும் அஸாதுக்களுடையசுபாவம். சினேகிதர்களால்உபகாரமடைந்து காரியங்களையும் செய்துகொண்டு பதில் உபகாரம் அவருக்குச் செய்யாதவர்கள் இறந்துபோனால், நன்றிகெட்ட அவர்களுடைய மாமிசத்தை நாய்நரிகள்கூடப் புசிக்கமாட்டா. திரவியம் இருந்தாலும் இல்லாவிட்டாலும், மித்திரர்களிடத்தில் வேண்டியபோது இரக்கவேண்டும். மித்திரர்களிடத்தில் யாசனை செய்யாமற் போனால், அவர்களுடைய குணகுணம் தெரியாது. உள்ளபொருள் கெடுவதனாலும் இல்லாத பொருள் கிட்டாததனாலும் உண்டாகும் விசனத்தால், அழகும் பலமும் ஞானமும் அழிகின்றன; வியாதியும் உண்டாகிறது: கிட்டத்தகாத பொருளைப்பற்றி விசனப்பட்டால், அது கிட்டப்போகிற தில்லை; தேகத்துக்கு மாத்திரம் கஷ்டமாகும்; சத்துருக்களுக்கும் சந்தோஷம் உண்டாகும்; ஆகையால், வீணுக விசனப்படாதேயும். மனுஷ்யன் இறக்கிறான், பிறகு பிறக்கிறான்; இளைக்கிறான், மறுபடி விருத்தியடைகிறான்; பிறரிடத்து யாசிக்கிறான்; பிறகு யாசிக்கப்படுகிறான்; பிறரைப் பார்த்து விசனப்படுகிறான், பிறகு இவனைப்பார்த்துப் பிறர் விசனப்படுகிறார்கள். சுகம் துக்கம் க்ஷேமம் நாசம் லாபம் நஷ்டம் உத்பத்தி மரணம் இவையெல்லாம் மனுஷ்யனுக்கு

முறையே வருகின்றன. ஆகையால், ஒருவன் சந்தோஷப் படவும் விசனப்படவும் கூடாது. சஞ்சலங்களான ஆறு ஞானேந்திரியங்களும் சிற்றின்பத்தில் பிரவேசித்தால், ஆத்துமா ஓட்டை ஆகிறது. ஓட்டையான மட்குடத்திலிருந்து ஜலம் ஒழுகிப்போவதுபோல, மனுஷ்யனுடைய புத்தி இந்திரியங்களின் வழியால் ஒழுகிப்போகின்றது'' என்றார்.

திருதராஷ்டிரன் சொல்லுகிறான்:—''விதுர! தருமபுத்திரன் சாம்பலால் மூடப்பட்ட நெருப்புக்கு ஒப்பானவன். அவனுக்கு நான் கபடமாகக் கெடுதல் செய்தேன். அவன் இப்போது என்புத்திரர்களை யுத்தத்தில் நாசஞ் செய்யப் போகிறான். என் சுகத்துக்காக நான் சம்பாதித்த பொருள் எல்லாம் எனக்குத் துக்கத்தையே கொடுக்கின்றன. என்மனமோ சஞ்சலமாக இருக்கிறது. ஆகையால், விதுர! துக்கத்தைக் கொடுக்காமல் ஸ்திரமானது எதுவோ, அதை எனக்குச் சொல்.''

விதுரர்:-''திருதராஷ்டிர! பிரமஞானம்,தருமம், இந்திரியங்களையடக்குதல், பிறர்பொருளை இச்சியாமலிருத்தல் ஆகிய இவைகளை நீர் அனுஷ்டிப்பதைத் தவிர, உமக்கு வேறுவகையால் க்ஷேமம் கிடைக்காது. பிரமஞானத்தால் பயம் நீங்கும்; தருமஞ்செய்வதால் பெருந்தன்மை கிடைக்கும்; குருசுச்ரூஷையால் ஞானமும், யோகாப்பியாசத்தால் சுகமும் கிடைக்கும்; மோக்ஷத்தை அடைகிறவர்கள், தானத்தின் புண்ணியத்தையும் வேதாத்தியயனத்தின் புண்ணியத்தையும் அபேக்ஷிக்கிறதில்லை; ஆசை துவேஷம் ஆகிய இவற்றை விட்டு ஆனந்தமாய்ச் சஞ்சரிக்கிறார்கள். நன்றாய் விதிப்படி செய்யப்பட்ட அத்தியயனம், யுத்தம், காரியம், தபசு ஆகிய இவைகள் முடிவில் சுகத்தைத் தரும்; செய்யுங்காலத்தில் அவை கஷ்டமாய்த் தான் தோன்றும், செய்து முடித்த பிறகு தான் சுகம்.

எவர்களுடைய மனசு வேறுபட்டிருக்கிறதோ, அவர்கள் ஹம்ஸதூலிகாதல்பத்திலே படுத்தாலும் அவர்களுக்குத் தூக்கம் வராது. அவர்களை ஸ்திரீகள் உபசரித்தாலும் சுகம் கிடைக்காது; அவரை, ஸூதர் மாகதர் புகழ்ந்தாலும் சுகமடையமாட்டார்கள். எவர்களுடைய மனசு வேறுபட்டிருக்கிறதோ, அவர்கள் தருமஞ் செய்யமாட்டார்கள்; கௌரவத்தை அடையமாட்டார்கள் ; அவர்களுக்குச் சுகம் கிடைக்க மாட்டாது ; அவர்களுக்குச் சமாதானமு மில்லை. அவர்களுக்கு இதம்சொன்னாலும், அது ருசிக்காது ; அவர்களால் குடும்பத்தை இனிதாக நடத்துதலும் முடியாது. அவர்களுக்கு நாசந்தான் முடிவு. பசுக்களுள்ளவனிடத்தில் பால் தயிர் நெய் முதலியன உண்டாகும் ; பிராமணனிடத்தில் தபசு உண்டாகும்; ஸ்திரீகளிடத்தில் சாபலம் உண்டாகும்; ஞாதிகளிடத்தில் பயம் உண்டாகும். ஒழுங்காயும் நீளமாயுமிருக்கும் அநேகநூல்கள் ஒன்று கூடினல், வஸ்திரமாக ஆகி, பாரத்தைச்சுமத்துதற்கும் மானத்தைக் காப்பாற்றுதற்கும் உதவுகின்றன ; அதைப்போலவே, பாண்டவர்களும் : அவர்கள் வெகு ஒழுங்காயும் நுட்பமாயும் நடக்கிறார்கள் ; அவர் தனிமையாய் வனவாஸஞ்செய்து கஷ்டப்பட்டிருக்கிறார்கள். அவர்களை ஒன்றாய்ச் சேர்த்துக்கொண்டால், அவர்கள் தாங்களும் சுகமடைந்து, உமதுபுத்திரர்களையும் சுகப்படுத்துவார்கள். விறகு தனியாகவிருந்தால், புகையும் ; சேர்ந்திருந்தால் சுவலிக்கும். திருதராஷ்டிர ! ஞாதிகளும் அப்படித்தான். தனியாகவிருந்தால், சத்துருக்களால் பராஜயமடைவார்கள்;சேர்ந்திருந்தால்,சத்துருக்களை வெல்லுவார்கள். எவர்கள், பிராமணர் ஸ்திரீகள் ஞாதிகள் கோக்கள் ஆகிய இவர்விஷயத்தில் தம்முடைய சூரத்தனத்தைக் காண்பிக்கிறார்களோ, அவர்கள் பழுத்த குலையிலிருந்து

பழம் உதிர்வதுபோல் விழுந்துவிடுகிருர்கள். தனித்தனியே முளைத்தமரம் பெரிதாயும் நன்ருய் வேரூன்றியதாயுமிருந் தாலும், அது காற்றினுல் கீழே தள்ளப்படும். அந்த விருக்ஷங்கள் பல ஒன்ருய்க்கூடி வளர்ந்திருந்தால், ஒன் றின் சார்பில் மற்ருென்று இருக்கிறபடியால், அவை பெருங்காற்றுக்குக்கூடச் சலிப்பதில்லை. இந்த உவமை யினுல், ஞாதிகள் பலவான்களாக விருந்தாலும் தனி மையாயிருந்தால் அவர்களைச் சத்துருக்கள் ஜயித்துவிடு வார்க ளென்பதையும், அந்த ஞாதிகளே ஒருவரோ டொருவர் சேர்ந்திருந்தால் குளத்தில் நீலோத்பலங்கள் விருத்தியாவதுபோல விருத்தியடைவார்க ளென்பதையும் அறியலாம். பிராமணர் பசுக்கள் ஞாதிகள் சிசுக்கள் ஸ்திரீ கள் அன்னதாதாக்கள் அடைக்கலம்புகுந்தவர்கள் ஆகிய இவர்கள் கொல்லத்தகாதவர்கள். மனுஷ்யனுக்கு இருக்க வேண்டிய முக்கியமான பொருள்கள் இரண்டு: அவை-தன மும் ஆரோக்கியமும். தனமில்லாவிட்டால்,மற்றகுணங்கள் வீணுகும்; அதுபோலவே, ஆரோக்கியமில்லாவிட்டால் தன மிருந்தும் வீண். ரோகிகள் பிணத்துக்குச் சமானமாவர். மகாராஜாவே! பாண்டவர்களைப் பார்த்து மனம்தபிக்கிறபடி யால், உமக்கு மற்றைக் குணங்கள் வீணுகின்றன. உமக்கு க்ஷேமமுண்டாகட்டும். மனந்தபிப்பது இரண்டுவிதத்தினு லாகும்; வியாதியால் உண்டாவது ஒன்று; பொருமையால் உண்டாவது இரண்டாவது. முதலிற் கூறிய சந்தாபம் ஔஷதமூலமாக எளிதில் சொஸ்தமாகும்; இரண்டா வதோ சொஸ்தமாவது கடினம்; அதனுல், வாய் கசக் கும்; தலை வலிக்கும்; பாபஞ்செய்யத் துணிவு உண்டா கும்; கொடுமை உண்டாகும்; தேகம் எரியும்: அது அயோக்கியர்களால் அடக்கமுடியாதது; அதை யோக்கி

யர்கள் அடக்கிவிடுவார்கள். மகாராஜாவே! அதை நீர் அடக்கினல், க்ஷேம மடைவீர். ரோகிகளுக்குப் பழங்கள் ருசிக்கமாட்டா. அதுபோலவே, மனத்தவிப்புக்கொண்டவர்களும் நல்லது இன்னது கெட்டது இன்னது என்று அறியமாட்டார்கள். அவர்களுக்கு எக்காலத்திலும் துக்கந் தான். திரவியமிருந்தும் அவர்களுக்குச் சௌக்கியம் இல்லை· முன்னே உம்முடைய புத்திரர்கள் சூதாட்டத்தில் திரௌபதி ஜயிக்கப்பட்டா ளென்று அவளைச் சபையில் இழுத்து வந்தார்கள். அச்சமயத்தில் துரியோதனனைத் தடுக்கும்படி நான் உமக்குச் சொன்னேன். அதை நீர் கேட்கவில்லை. அதின்பலன்தான் நீர் இப்பொழுது ஸந்தாபப்படுவது. பொறுமையுள்ளவனுக்கு விரோதஞ் செய்வது, பலத்திற் சேரமாட்டாது. தருமம் மிகச் சூக்ஷ்மமானது; அதை யறியவேண்டும். குரூரனை மனுஷ்யனுக்குக் கிடைத்த ஐசுவரியம் சீக்கிரம் அழிந்துபோம்; பொறுமையுள்ளவனுக்குக் கிடைத்ததோ, புத்திரபௌத்திரபரம்பரையாய் நீடித்து நிற்கும். உமது புத்திரர்கள் பாண்டவர்களையும், பாண்டவர்கள் உமது புத்திரர்களையும், காப்பாற்றட்டும். ஒருவருடைய சத்துரு மித்திரர், மற்றவர்க்குச் சத்துரு மித்திரர்கள் என்று எண்ணி அவர்கள் சுகிகளாக ஆகவேண்டும். அஜமீடவம்சத்திற் பிறந்த திருதராஷ்டிரரே! நீர் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஆதாரத்தூணு யிருக்கிறீர். இவர்களுடைய நன்மையும் தீமையும் உம்முடைய அதீனமாக இருக்கின்றன. சிறுவரான பாண்டவர்கள், வனவாசஞ்செய்து கஷ்டப்பட்டிருக்கிறார்கள்; அவர்களைக் காப்பாற்றும். அதனல், உம்முடைய கீர்த்தியும் ரக்ஷிக்கப்படும். நீங்கள் பாண்டவர்களுடன் சந்திசெய்துகொள்ளுங்கள். உங்கள் இருவர்க்கும்நடுவில் சத்துருக்கள் புகவேண்

டாம். பாண்டவர்கள் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். துரியோதனனையும் சத்தியத்தில் நிறுத்தும்: அப்படியானல், சமாதான மாகும்.

திருதராஷ்டிரரே ! அடியிற் கண்ட பதினேழு ஜனங்களும் தமது கைப்பிடியால் ஆகாசத்தைக் குத்துகிறவர்கள், இந்திரதனுசை வளைக்கிறவர்கள், சூரியனுடைய கிரணங்களைக் கையாற் பிடிக்கிறவர்கள், அதாவது அசாத்திய காரியங்களைச் செய்ய விரும்பும் மூடர்கள் என்று சுவாயம்புவமனு சொல்லியிருக்கிறார். அந்தப்பதினேழு பெயர்களும் யாவரென்றால் ?—(1) அயோக்கியனுக்கு வித்தை சொல்லிக்கொடுக்கிறவன், (2) அல்பலாபத்தாற்சந்தோஷப்படுகிறவன், (3,4) சத்துருவினிடத்திலும் ஸ்திரீயினிடத்திலும் ஊழியஞ்செய்து தன்னுடைய க்ஷேமத்தை விரும்புகிறவன், (5) யாசிக்கத்தகாத பதார்த்தத்தை யாசிக்கிறவன், (6) அல்பகாரியத்தைச் செய்து தன்னைப் புகழ்ந்து கொள்பவன், (7)யோக்கியமான குலத்திற் பிறந்து அகாரியஞ் செய்கிறவன், (8) பல ஈனனுகவிருந்தும் பலவானோடு நித்தியம் துவேஷிக்கிறவன், (9) விசுவாசமில்லாதவனுக்கு உபதேசஞ் செய்கிறவன், (10) விரும்பத்தகாத பொருளை விரும்புகிறவன், (11) மருமக்களுடன் பரிஹாஸவார்த்தையைப்பேசும் மாமன், (12) மருமகளுடைய பிறந்த வீட்டார்களால் ஆபத்திலிருந்து நீங்கி மறுபடியும் அவர்களிடத்துச் சம்மானத்தை விரும்புகிறவன், (13) பிறர் பாரியையினிடம் புத்திரனைப் பெற்றவன் அல்லது பிறருடைய நிலத்தில் விதைவிதைத்தவன், (14) ஸ்திரீயுடன் மரியாதைக்குமாறான பேச்சுப் பேசுகிறவன், (15) உபகாரத்தைப் பெற்றுக்கொண்டு மறப்பவன், (16) ஒருவர்க்கு ஒன்றைக் கொடுத்துவிட்டுப் பச்சாத்தாபமடை

கிறவன், (17) அயோக்கியனை யோக்கியனென்றும் பொய்யை நிஜமென்றுஞ் சொல்லுகிறவன் என்ற இவர்களாவர். இந்தப் பதினேழுபேர்களையும் யமதூதர்கள் கயிற்றைக்கட்டி நரகத்துக்குக் கொண்டுபோகிறார்கள். ஸத்தியம்பேசுகிறவனிடத்தில் ஸத்தியமும், பொய்பேசுகிறவனிடத்தில் பொய்யும் பேசவேண்டும். கிழத்தனம் அழகைக் குறைக்கிறது; ஆசை தைரியத்தையும், மிருத்யு பிராணனையும், பொறாமை தருமத்தையும், காதல் வெட்கத்தையும், அயோக்கியரிடத்தில் ஊழியம் நன்னடத்தையையும், கோபம் ஐசுவரியத்தையும், கருவம் எல்லாவற்றையும் நாசப்படுத்துகின்றன."

திருதராஷ்டிரன்:—"விதுர! மனுஷ்யனுக்கு ஆயுசு நூறுவருஷம் என்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. இவன் முழுஆயுசை ஏன் அடைகிறதில்லை?"

விதுரர்:—"திருதராஷ்டிரா! தேவர்கள் உமக்கு நன்மை செய்யட்டும். இதைக் கேட்கவேணுமென்று தோன்றி நீர் கேட்டீரே! சொல்லுகிறேன், கேளும். அதிகருவம், மரியாதைமீறின பேச்சு, பெருங்குற்றம், கோபம், தன் வயிற்றையே வளர்க்கவேண்டுமென்ற விருப்பம், மித்திரத்துரோகம் ஆகிய இவ்வாறும், கூர்மையான கத்தியைப் போன்றவை. இவைதாம் பிராணிகளுடைய ஆயுளைக் குறைக்கின்றன. யமன் மிருத்யு என்பது வேறில்லை. நம்பினவனுடைய பத்தினியுடனும் குருபத்தினியுடனும் சம்போகஞ் செய்கிறவனும், * துவிஜனாகத் தான் இருந்து சூத்திரஸ்திரீயைப் பாணிக்கிரகணஞ்செய்து கொள்ளுகிறவனும், கள்ளைக் குடிக்கிறவனும், தன்வேலைகளைத் தான் செய்யாமலே அன்னியரை வேலைசெய்யக்

* துவிஜனாக-பிராமண க்ஷத்திரிய வைசிய வர்ணங்களில் ஒரு வர்ணத்திற் பிறந்தவனாக.

கட்டளை யிடுகிறவனும், பிறருடைய பிழைப்பைக் கெடுக்கிறவனும், பிராமணர்களிடத்தில் வேலை வாங்குகிறவனும், அடைக்கலம்புகுந்தவனைக் கொல்லுகிறவனும், பிரமஹத்தி செய்தவர்களுக்கு ஒப்பாவர்கள். இவர்களுடன் சேர்ந்தவர்களும் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டும் என்று வேதத்திற் சொல்லியிருக்கிறது. குரு சொல்லுகிறபடி நியாயமாக நடக்கிறவன், தாதா, அதிதிகளுக்கு இட்டு மிகுந்த அன்னத்தைச் சாப்பிடுகிறவன், இம்சிக்காதவன், கெட்டகாரியத்தை விட்டவன், பிறர்செய்தஉபகாரத்தை நினைக்கிறவன், நிஜம்பேசுகிறவன், மெதுவான சுபாவ முள்ளவன், ஆத்துமஞான முள்ளவன் ஆகிய இவர்கள் சுவர்க்கத்துக்குப் போகிறவர்கள்.

அரசரே! உலகத்தில் எப்பொழுதும் பிரியமாய்ப் பேசுகிறவர்கள் எளிதில் கிடைப்பார்கள். ஆனால், பார்வைக்கு அப்பிரியமாயும், பயனைப்பார்த்தால் இதமாயும் இருக்கும் வார்த்தையைப் பேசுகிறவர்களோ கிடைக்கமாட்டார்கள். அதைக்கேட்டு அனுஷ்டிப்பவனோ, முற்றிலும் கிடைக்கமாட்டான். அரசனுக்குப் பிரியமாயிருந்தாலும் சரி, அப்பிரியமாயிருந்தாலும் சரி, தருமத்திலேயே திருஷ்டிவைத்து அவனுக்கு இதத்தையே எவன் சொல்லுவானோ, அவன் தான் அரசனுக்குச் சகாயஞ்செய்கிறவன். ஒருகுடியைக் காப்பாற்றுவதற்காக அதற்கு இடையூறு செய்யும் ஆளைத் தள்ளலாம்; அப்படியே, கிராமத்தைக் காப்பாற்ற ஒரு குடியையும், தேசத்தின்க்ஷேமத்திற்காகக் கிராமத்தையும் விடலாம்; அவ்வாறே, தன்னைக் காப்பாற்றப் பூமியையே விடவேண்டியது. ஆபத்துக்காலத்தில் உதவவேண்டு மென்று திரவியத்தை ரக்ஷிக்கவேணும்; தனத்தைச் செலவுசெய்தாவது பெண்டுபிள்ளைகளை ரக்ஷிக்கவேணும்; பெண்டு பிள்ளை

களையும் தனத்தையும் செலவுசெய்தாவது தன்னைக்காப்பற்றவேண்டும். இதற்குமுன் அநேகஜனங்கள் சூதாடித்துவேஷ மடைந்திருக்கிறார்கள். புத்திமான் அதை யறிந்து விநோதத்துக்காகவும் சூது ஆடக்கூடாது. அரசரே! சூது ஆட ஆரம்பிக்கும்போதே 'இது தகாத காரியம்' என்று நான் சொன்னேன். ஆனால், அந்தச்சொல் இதத்தையே செய்யுமானாலும், மருந்து ரோகிக்கு ருசிக்காததுபோல் உமக்கு ருசிக்கவில்லை. அழகிய தோகைகளையுடைய மயிலைப்போன்ற பாண்டவர்களை, காக்கைகள் போன்ற உம்முடையபுத்திரர்களைக்கொண்டு தோற்பித்தீர்; சிங்கங்களைவிட்டு நரிகளை நீர் ரக்ஷிக்கிறீர்; சமயம் நேரிட்டபோது, துக்கமடையப்போகிறீர். யஜமானனுக்கு இதஞ்செய்ய வேணுமென்று மனமொப்பிக் காரியஞ்செய்யும் வேலைக்காரரைக் கோபிக்காம லிருந்தால், அவர் யஜமானனை ஆபத்துக் காலத்திலும் கைவிடுகிற தில்லை. வேலைக்காரர்களுடைய சம்பளத்தைப் பிடித்து அரசன் புதிதான ராச்சியத்தையும் தனத்தையும் சேர்க்க விரும்பக்கூடாது. வேலைக்காரர்களும் நண்பர்களும் மந்திரிகளும் வயிற்றுக்கில்லாமற் போனால் அரசனை விட்டுவிடுவார்கள். அரசன் முதலிலே செய்யவேண்டிய வேலைகளைக் கணக்கிட்டுச் செய்யவேண்டும். பிறகு, வரவுசெலவைக் கணக்கிட்டுத் தகுந்தசம்பளம் கொடுத்துத் தகுந்த துணையாளர்களைச் சேகரிக்க வேணும். அசாத்தியமான காரியங்களைக்கூடச் துணையாளர்களால் முடிக்கக்கூடும். எவன் யஜமானனுடைய அபிப்பிராயமறிந்து ஆலசியமில்லாமல் எல்லாக்காரியங்களையும் செய்கிறானோ, இதமாகப் பேசுகிறானோ, நன்னடத்தையைக் கொண்டிருக்கிறானோ, ராஜபக்தியை யடைந்துள்ளானோ, பிரபுசக்தி உத்ஸாஹசக்தி மந்திரசக்தி என்ற இவற்றை, உபயோகிக்கத்

தெரிந்துள்ளானே,அந்தந்த வேலைக்காரனை அறிந்து அரசன் தன்னைப்போல் எண்ணி ஆதரிக்கவேணும். எவன் சொன்னாலும் கேட்கமாட்டானோ, வேலையிட்டால் சாக்குச் சொல்வானோ, நான்தான் புத்திமானென்று எண்ணுவானோ, விரோதமாகப் பேசுவானோ, அந்தவேலைக்காரனை உடனே அரசன் தள்ளவேண்டியது. கர்வமில்லாமை, சாமர்த்தியம், வீண் தொழிலைச் செய்தல், தயை, இனியபேச்சு, பேதகமடையாமை, ஆரோக்கியம், பிரயோசனமும் சமயோசிதமுமாகப் பேசுதல் ஆகிய இவ்வெட்டுக்குணங்கள் தூதனுக்கு இருக்கவேண்டியது. அகாலத்திலே பிறருடைய வீட்டுக்குப் போகக்கூடாது. இராக்காலத்தில் நாற்சந்தியில் ஒளிந்திருக்கக்கூடாது. அரசன் விரும்பிய ஸ்திரீயை இச்சிக்கக்கூடாது. ஒருவன் ரஹஸியமாகச் சொன்ன வார்த்தைக்குப் பதில் வெளிப்படையாகச் சொல்லக்கூடாது. மந்திராலோசனையில் சேர்க்கப்பெற்ற அயோக்கியனை, 'உன்னிடத்தில் எனக்கு நம்பிக்கை இல்லை' என்று சொல்லக்கூடாது; ஆனால், காரணத்தோடு ஏதோ சமாதானம் சொல்லி அவனை விலக்க வேண்டும். சிக்ஷை செய்யத்தக்கவனிடத்திலும் தயைவைத்த அரசன், வியபிசாரஸ்திரீ, ராஜசேவகன், புத்திரன், சகோதரன், சிறு குழந்தைகளின் தாயான விதவை, போர்செய்து பிழைக்கிறவன், அதிகாரத்தை விட்டு நீக்கப்பட்டவன் ஆகிய இவர்களுடன் விவகாரம் வைத்துக்கொள்ளக்கூடாது. புத்தி, நல்லகுலத்திற்பிறப்பு, சாஸ்திரப்படிப்பு, இந்திரியங்களையடக்குதல், பராக்கிரமம், மிதமாகப்பேசுதல், சக்திக்குத்தக்கபடி தானம், நன்றியறிதல், இந்தக் குணங்கள் மனுஷ்யனைப் பிரசித்தப்படுத்துகின்றன. இவ்வளவு குணங்களைக் காட்டிலும் அரசனையடுத்திருத்தல் மேலானது. குணமில்லாதவனை அரசன்

மரியாதை செய்தாலும், அவன் மகாகுணமுள்ளவனாக மதிக்கப்படுவான். தினந்தோறும் ஸ்நானஞ் செய்கிறவனுக்கு, பலம், ரூபம், மதுரமானஸ்வரம், சுத்தமான உச்சரிப்பு, தேகத்திற்பளபளப்பு, வாசனை, ஆசாரம், ஸம்பத்து, அழகு, மேன்மையான பெண்கள் ஆகியபத்துக்குணங்கள் கிடைக்கின்றன. மிதமாகச் சாப்பிடுகிறவனுக்கு, ஆரோக்கியம், ஆயுசு, பலம், ரோகமில்லாதகுழந்தைகள், பகுபோஜி என்ற பெயரையடையாமை இந்த ஐந்துகுணங்கள் கிடைக்கின்றன. மேலும், * வேலைசெய்யாதவன், பகுபோஜி, எல்லாருடனும் பகைக்கிறவன், மாயாவி, குரூரன், தேசகாலங்களையறியாதவன், டம்பமாகச் சிறந்தவஸ்திரங்களை உடுக்கிறவன். இவர்களை வீட்டிலே வைத்துக்கொள்ளக் கூடாது. கிருபணன், லோபி, நிந்திக்கிறவன், மூர்க்கன், செம்படவன், நீசர்களைப் பூசிக்கிறவன், தயையில்லாதவன், துவேஷஞ்செய்கிறவன், நன்றியறிதலில்லாதவன் இவர்களை எக்காலத்திலும் யாசிக்கக்கூடாது. துக்கப்படுத்துங் காரியங்களைச் செய்கிறவன், அஜாக்கிரதையுள்ளவன், நித்தியமும் அசத்தியம் பேசுகிறவன், உறுதியான பக்தியில்லாதவன், எஜமானனை நேசியாதவன், நான் தான் சமர்த்தன் என்று எண்ணினவன் ஆகியஇவ்வாறு மனுஷ்யர்களையும் அருகில் வைத்துக்கொள்ளக்கூடாது. சகாயஞ்செய்கிறவர்களில்லா விட்டால் திரவியஞ் சேராது. திரவியமில்லாவிட்டால் சகாயஞ் செய்பவர் சேரார். இவ்விரண்டும் ஒன்றையொன்று சார்ந்தவை. புத்திரர்களைப் பெற்று அவர்கட்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்து அவர்களுக்கு ஏதாவது பிழைப்பையும் ஏற்படுத்திப் புத்திரிகளைத் தகுந்த இடங்களில்

---

* பிசாசச் சாப்பாட்டுக்காரன்.

விவாஹஞ்செய்துகொடுத்துவிட்டு வனத்திற்குப் போய்த் தவஞ் செய்யவேண்டும். தனக்கும் ஸர்வபிராணிகளுக்கும் இதமானதைத் தான் ஈசுவரசந்தோஷத்திற்காகச் செய்ய வேண்டும். இதுதான் ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கும். திரவியத்தின் விருத்தி, பராக்கிரமம், சூரத்தனம், சத்துவகுணம், முயற்சி, நிச்சயம் இவ்வளவு குணங்களும் எவனுக்கு இருக்குமோ, அவனுக்குத் தன்வயிற்றைவளர்ப்பதில், சிந்தை ஏது ? எவர்களைக்கண்டு இந்திரன்முதலான தேவர்களும் பயப்படுகிறார்களோ, அந்தப் பாண்டவர்களுடன் விரோதம் செய்வதிலிருக்கும் கெடுதியை நீரே பாரும். புத்திரர்களுடன் பகையும், பயப்பட்டு வசிப்பதும், கீர்த்தியின் நாசமும், சத்துருக்களுக்குச் சந்தோஷ முண்டாக்குகின்றன. இந்திரனுக்கு ஒப்பான திருதராஷ்டிரரே! பீஷ்மர் துரோணர் யுதிஷ்டிரராஜா என்ற இவர்களுக்கும் உமக்கும் கோபம்விருத்தியடைந்தால், ஆகாயத்தில் தூமகேது உதித்தாற்போல் ஸர்வலோகத்துக்கும் நாசம் நேரிடும்.ஆகையால், அவ்விதம் நேரிடாமல், உம்முடைய நூறுபுத்திரர்களும் கர்ணனும் பாண்டவர்கள் ஐவரும் இவர்களெல்லோரும் ஒன்றாய்க்கூடி நாற்சமுத்திரங்களுக்குட்பட்ட பூமியைக் காப்பாற்றும்படி நீர் செய்யும். கௌரவர் வனத்துக்கு ஒப்பானவர்; பாண்டவர்கள் புலிகளுக்கு ஒப்பானவர்கள்; நீர் வனத்தையும் புலிகளையும் நாசமடையச் செய்யவேண்டாம்; அல்லதுபுலிகளும் வனத்தை யழிக்கவேண்டாம்; வனமில்லாமற் போனால் புலிகளும் க்ஷேமம் அடையா; புலிகளில்லாவிட்டால் வனமும் அழிந்து போம்; வனத்தாற் புலிகளும், புலிகளால் வனமும் ரக்ஷிக்கப்படும். அயோக்கியர்கள் பிறருடைய குணங்களை அறிய விரும்புகிற தில்லை. அவர்களுடைய தோஷங்களைமாத்திரம் அறிய விரும்புகிறார்கள்.

திரவியம் சம்பாதிக்க விரும்புகிறவன் முதலில் தருமத்தைச் செய்ய வேணும். அமிருதம் சுவர்க்கலோகத்தை விட்டிராததுபோல், திரவியம் தருமத்தை விட்டு இராது. எவனுடைய மனம் பாவத்தை விட்டு நீங்கிப் புண்ணியத்திலேயே நாடியிருக்கிறதோ, அவன் நன்மையையும் தீமையையும் அறிகிறான். எவன் தருமம் அருத்தம் காமம் என்ற இவைகளைத் தகுந்த சமயத்தில் உபயோகப்படுத்துகிறானோ, அவன் அவைகளுடைய உபயோகத்தை இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் அடைகிறான். எவன் மிதம் மீறிக் கோபத்தையும் சந்தோஷத்தையும் அடைகிறதில்லையோ, என்ன ஆபத்து வந்தாலும் விசனப்பட மாட்டானோ, அவன் ஐசுவரியத்துக்குப் பாத்திரனாகிறான். அரசர்களுக்கு ஐந்துவிதபலம் உண்டு; அவையாவன—பாகுபலம்[கைகளின் பலம்,] மந்திரிகளின்பலம், தனத்தின்பலம், வமிசத்தின்பலம், புத்தியின்பலம் என்பன. இவைகளில் ஒன்றைக்காட்டிலும் மற்றொன்று பெரியது. இவைகளில் புத்திபலம் மிகவும் பெரியது. பெருந்துயரத்தை யுண்டு பண்ணச் சக்தியுள்ளவனுடன் துவேஷஞ் செய்துகொண்டு, 'நான் தூரத்தில் இருக்கிறேன்' என்று நினைத்து அஜாக்கிரதையாக இருக்கக்கூடாது. ஸ்திரீகள் அரசர் சர்ப்பங்கள் படிப்பு எஜமானன் சத்துரு இன்பம் ஆயுசு ஆகிய இவைகளில் புத்திமான் நம்பிக்கை வைக்கக்கூடாது. புத்தியென்னும் பாணத்தால் அடிபட்ட பிராணிக்குச் சிகிச்சை செய்கிறவர்களும் இல்லை; ஔஷதங்களும் இல்லை; ஹோம மந்திரங்களும் மங்களகாரியங்களும் அதர்வவேதப்பிரயோகங்களும் ஸித்தரஸாயனங்களும் அவர்கள்விஷயத்திற் பயன்படா. சர்ப்பம் அக்கினி சிங்கம் குலமகன் இவையெல்லாம் மிகுந்த தேஜசு உள்ளவை. ஆகையால், இவை

களை அலட்சியம் செய்யக்கூடாது. மகாப்பிரகாசமான அக்கினி அரணிக்கட்டையில் மறைந்திருக்கிறது; அதைத் தேய்க்கிறவரையில் அது எரிக்கிறதில்லை. இரண்டு கட்டைகளைத் தேய்த்தால் மறைந்த அந்த நெருப்பு வெளிக்கிளம்பி அந்தக்கட்டைகளையும் இதர பதார்த்தங்களையும் சுட்டுவிடுகிறது. குலமக்களும் அக்கினியைப்போலவே அடங்கியிருந்து, அவமதிக்கப்பட்டபோது எரித்துவிடுவார்கள். நீரும் உமது பிள்ளைகளும் கொடியைப் போன்றவர்கள். பாண்டவர்கள் பெரியவிருட்சத்துக்கு ஒப்பானவர்கள். விருட்சத்தை யடையாமல் கொடிகள் வளரமாட்டா. அரசரே! உமது புத்திரர்கள் வனம் போன்றவர். பாண்டவர்கள் சிங்கங்கள். சிங்கங்க ளில்லாவிட்டால் வனம் அழிந்து போம்; வனமில்லா விட்டால் சிங்கங்கள் அழிந்துவிடும்.

வீட்டுக்கு வயதுசென்றவன் அதிதியாக வந்தால், வாலிபனுடைய பிராணன் வெளியிற்போக யத்தனப்படுகின்றது. அவரை எதிர்நின்று மரியாதை செய்வதாலும் வணங்குவதாலும் வாலிபன் தனது போகும் பிராணனை யடைகிறான். சாதுவான அதிதி வீட்டுக்கு வந்தால், அவனுக்கு உட்காரும்படி முதலில் ஆசனம் கொடுக்கவேண்டும்; ஜலம் கொணர்ந்து கால் கழுவவேணும்; பிறகு, அவனுடைய க்ஷேமத்தை விசாரித்துத் தன் ஸ்திதியையும் சொல்லவேணும்; யோக்கியதைக்குத் தக்கபடி அன்னம் கொடுக்கவேணும். வீட்டுக்காரன், * லோபி பயப்பட்டவன் கிருபணன் என்று சொல்லும்படி இவ்வாறு இருந்தால், படித்தவர்கள் அவன்வீட்டில் மதுபர்க்கபூசையையும் பசு

* லோபி-பிறர்பொருளில்ஆசைவைத்தவன் ; பயப்பட்டவன்-கொடுத்தால் என்ன ஆகுமோவென்று பயமடைந்தவன்; கிருபணன் கொடாதவன்.

வையும் வாங்கிக்கொள்ளுகிற தில்லை. எவ்விதமானாலும், அதிதிபூசை செய்யாதவனுடைய ஜன்மம் வியர்த்தம். வைத்தியன் ஆயுதங்கள்செய்பவன் பிரமசரியவிரதங்கெட்டவன் திருடன் கொடுமையானவன் கட்குடியன் கர்ப்பத்தைக் கெடுக்கிறவன் சைனியத்திற்பிழைக்கிறவன் வேதத்தைவிற்கிறவன் இவர்கள் மிகவேண்டியவர்களானாலும், அவர்களுக்குக் குடிதண்ணீர்கூடக் கொடுக்கக்கூடாது. ஆனால், அவர்களே அதிதியாக வந்தால், குலகோத்திரங்களை விசாரிக்காமலே மரியாதைசெய்யவேணும். உப்பு அன்னம் தயிர் பால் தேன் எண்ணெய் நெய் எள்ளு மாமிசம் பழம் கிழங்கு சாகம் சிவப்புவஸ்திரம் சுகந்தப்பொருள் வெல்லம் இவ்வளவு பதார்த்தங்களையும் விற்கக்கூடாது. கோபமற்றவன், மண்ணும் கல்லும் பொன்னும் சமமென்று நினைத்தவன், விசனமற்றவன், சினேகமும் துவேஷமு மில்லாதவன், நிந்தையையும் ஸ்தோத்திரத்தையும் சமமாக நினைத்தவன், பிரியம் அப்பிரியம் என்ற இவற்றை விட்டவன், ஸர்வஸமன் என்ற இந்தக்குணங்களோடு கூடிய அதிதி வந்தால், அவசியம் அவனை ஆதரிக்கவேண்டும். எவன் நீவாரதானியம் கிழங்கு இங்குதம் கீரை இவைகளையே புசிக்கிறவனோ, இந்திரியங்களை ஜயித்த பிரமஞானியோ, அக்னிஹோத்திரஞ் செய்கிறவனோ, வனத்தில் வசித்து அதிதிபூசனை செய்கிறவனோ, இக்குணமுள்ளவர் அதிதியாகக் கிடைத்தால் அது பெரும் புண்ணியந்தான். புத்திமானுக்கு அபகாரஞ்செய்துவிட்டு, 'நான் தூர இருக்கிறேன்' என்று நம்பக்கூடாது; அவனுக்குப் புத்திதான் கைகள்: அவைகள் மிக நீண்டவை அவைகளால் தூரத்தில் இருப்பவனையும் புத்திமான் இம்சிப்பான். நம்பத்தகாதவனை நம்பக்கூடாது; நம்பத்தகுந்தவனையும் அதிகமாக நம்பக்கூடாது. நம்பிக்கையாலுண்

டான பயம் வேரோடு அழித்துவிடும். பொறுமையடையக் கூடாது. தன் ஸ்திரீயினுடைய மானத்தைக் காப்பாற்ற வேண்டும். பொருளைத் தன்னை அண்டினவர்களுக்குத் தக்கபடி பங்கிட்டுக் கொடுக்கவேண்டும். ஸ்திரீகளிடத்தில் பிரியமாயும் அழகாயும் மதுரமாயும் பேசவேண்டும்; ஆனால், அவர்களுக்கு வசனாக ஆகக்கூடாது.

குடும்பத்தின்பாக்கியம் ஸ்திரீகளுடைய அதிர்ஷ்டத்தைச் சேர்ந்தது. அவர்கள் வீட்டுக்குப் பிரகாசங் கொடுக்குஞ் சோதியைப் போன்றவர்கள்; அவர்கள் வீட்டுக்கு மகாலட்சுமி ஸ்வரூபமானவர்கள்; ஆகையால், கிருகஸ்தன் அவர்களை விசேஷமாய்க் காப்பாற்றவேணும். பிதாவுக்கு *அந்தப்புரத்து அதிகாரத்தைக் கொடுக்கவேணும். மாதாவுக்குப் போசனசாலையின் அதிகாரத்தைக் கொடுக்கவேண்டும். தன்னைப்போன்றவர்களுக்கு கால்நடைகளைக் காப்பாற்றும் அதிகாரத்தைக் கொடுக்கவேணும். சாகுபடியின் அதிகாரத்தைத் தானே வைத்துக்கொள்ளவேண்டும். வேலைக்காரர்களால் வியாபாரத்தைச் செய்துகொள்ளவேண்டும். புத்திரர்களால் பிராமணசேவை செய்து கொள்ளவேண்டும். சாந்தமான ஜலத்திலிருந்து அக்கினியும், பிராமண ஜாதியிலிருந்து க்ஷத்திரியஜாதியும், கல்லிலிருந்து பொன் முதலிய லோஹமும் உண்டாயிருக்கின்றன. அக்கினி க்ஷத்திரியன் லோஹம் ஆகிய இம்மூன்றிலும் ஒருதேஜசு இருக்கிறது. அது எல்லாஇடங்களிலும் பிரகாசிக்கின்றது. ஆனால், தமது உற்பத்திஸ்தானத்திற் சேர்ந்தால், அது அவிந்துவிடும். உயர்குலத்திற் பிறந்த உத்தமபுருஷர்கள் அக்கினியைப் போலத் தேஜோமயமாக இருக்கிறார்கள்; அக்கினி

* ஸ்திரீகளைக் காப்பாற்றும் அதிகாரத்தை.

கட்டையில் அடங்கியிருப்பதுபோல, அவர்களும் வெளிப் படாம லிருப்பார்கள்.

எந்த அரசன் செய்யும் ஆலோசனையைச் சமீபத்திலுள்ளவர்களும் தூரத்திலிருக்கிறவர்களும் அறிய மாட்டார்களோ, எவன் எல்லா இடங்களிலும் திருஷ்டியை வைத்திருக்கிருனோ, அவன் வெகுகாலம் ஐசுவரியத்தை அனுபவிப்பான். தருமம், அருத்தம், காமம் ஆகிய காரியங்களைச் செய்யும்போது யாருக்கும் சொல்லக்கூடாது; செய்த பிறகுதான் வெளியிற் காண்பிக்கவேண்டும். இப்படிச் செய்தால்,ஆலோசனை கெடுகிறதில்லை. பருவதம் உபரிகை அரணியம் முதலிய ரஹசியமான இடங்களில் உட்கார்ந்து மந்திராலோசனை செய்தால், அது கெடாது. எல்லாவகையிலும் சத்துருக்கள் தன் ஆலோசனையை அறியாதபடிசெய்யவேண்டும். 'மித்திரனுக விருந்தாலும் புத்திகூர்மையுள்ளவனு? பண்டிதனுக இருந்தாலும் வாயை வெளிவிடாது அடக்குபவனு?' என்று ஆராய்ந்து அறிந்த பின்பே, அவர்களை மந்திராலோசனையிற்சேர்க்கவேணும். திரவியத்தைச் சேர்ப்பதும் மந்திராலோசனையைக் காப்பாற்றுவதும், மந்திரியின் சுவாதீனமாக இருக்கின்றன. எவ்விதமாக இருந்தால், தருமார்த்த காமமென்னும் காரியம் செய்துமுடிந்தபிறகுதான் அதிகாரிகளுக்குத் தெரியுமோ, அவ்விதம் ரஹசியமாய்க் காரியம் செய்யும் அரசனுக்குச் சகலகாரியங்களும் நிச்சயமாகக் கைகூடும். புத்தியில்லாமல் அநுசிதகாரியங்களைச் செய்கிறவனுக்கு எந்தக் காரியமும் கெட்டுப்போவதன்றி உயிர்ச்சேதமும் நேரிடும். நற்செய்கைகளைச் செய்வது சுகரம் அவைகளைச் செய்யாவிட்டால், பின் கஷ்டத்தை விளைக்கும். வேதத்தையோதாத பார்ப்பான் திவசத்துக்கு எப்படி அர்ஹ

னல்லனே, அப்படியே *ஆறுகுணந்தெரியாதவன் ஆலோசனைக்குத் தகுந்தவனல்லன்:

'நமக்கு இருக்கவேண்டிய பலமெல்லாம் விருத்தியாகி இருக்கிறதா, ஸமமாயிருக்கிறதா, குறைந்திருக்கிறதா?' என்பதையும் ஷட்குணங்களையும் அறிந்து, புகழத்தக்க சுபாவம் படைத்த அரசனுக்கு, எல்லாப்பூமியும்சுவாதீனந்தான் எவன் சந்தோஷமும் கோபமும் வீணல்லவோ, முக்கிய வேலைகளைத் தான்செய்து மேற்பார்வையையும் எவன் பார்க்கிறானே, கஜானாவின் இருப்பை நன்றாய் அறிந்திருக்கிறானே, அந்தராஜாவுக்குப் பூமியிலிருந்து எல்லாப்பொருளும்கிடைக்கும். அரசன், தனக்கு 'அரசன்' என்னும் பெயர் இருப்பதுகொண்டும் வெண்குடையிருப்பது கொண்டும் தான் சந்தோஷப்படவேண்டும்; திரவியத்தை வேலைக்காரர்களுக்குத் தக்கபடி பங்கிட்டுக்கொடுக்கவேண்டும்: எல்லாவற்றையும் தானே அனுபவிக்கக் கூடாது.

பிராமணனுடைய சுபாவத்தைப் பிராமணன்தான்அறிவான்; ஸ்திரீயினுடைய சுபாவம் பர்த்தாவுக்குத் தெரியும்; மந்திரியை அரசன் அறிவான்; அரசன்குணத்தை அரசன் தான் அறிவான். கொல்லத் தகுந்த கொடிய பகைவன் ஒருவன் கையில் அகப்பட்டால், அந்தப்பகைவனை விட்டிடக் கூடாது. ஒளிந்திருந்தாவது அவனைக் கொல்லவேண்டும்.

---

*சந்தி, விக்கிரகம், யானம், ஆசனம், துவைதீபாவம், ஆச்ரயம் என்பன ஆறுகுணங்கள்; (1) பலவானுடன் சமாதானம்-சந்தி; (2) துர்ப்பலனோடுபோர்செய்வது-விக்கிரகம்; (3) எதிர்ப்பது-யானம்; (4) கோட்டை கட்டுவது-ஆசனம்; (5) சத்துருக்களில் ஒருவரோடொருவரை வேறுபடுத்துவது-துவைதீபாவம்; (6) தன் சத்துருவுக்குச் சத்துருவான பலசாலியைச் சேர்த்துக்கொள்வது-ஆச்ரயம்.

கொல்லாவிட்டால், சீக்கிரம் அவனிடத்திலிருந்து பயமுண்டாகும்.தேவர் அரசர்பிராமணர் கிழவர் குழந்தைகள் ரோகிகள் இவர்களிடத்தில் கொஞ்சமேனும் கோபிக்கக் கூடாது. காரணமில்லாத கலஹத்தை மூடர் செய்வார்கள். அதைப் புத்திமான் செய்யக்கூடாது: அப்படியிருப்பதனால், கீர்த்தியுண்டாகும், அவனுக்குச் சங்கடமும் நேரிடாது. எவனுடைய சந்தோஷத்தால் லாபமில்லையோ, கோபத்தாலும் ஹானி இல்லையோ, அவ்வாறனவனை, எவ்விதம் ஸ்திரீகள் நபும்ஸகனைப்பதியாக அடையவிரும்பமாட்டார்களோ, அவ்விதமாகவே,அரசனாகஇருக்க எவரும்இச்சிக்கமாட்டார்கள். 'புத்திமானுக்குத் திரவியம் கிடைக்கிறது. முட்டாளுக்கு இல்லை' என்று இல்லை. இதன் ரஹஸ்யம் புத்திமானுக்குத் தான்தெரியும்,மூடர்களுக்குத்தெரியாது.வித்யை நல்லொழுக்கம் வயசு புத்தி தனம் குலம் இவைகளில் மேன்மையானவனை மூர்க்கர்கள் நித்தியம் அவமதிக்கிறார்கள். நீசகாரியஞ் செய்கிறவன் மூர்க்கன் பொறுமையுள்ளவன் கடுமையாகப் பேசுகிறவன் கோபிஷ்டன் இவர்களுக்குச் சீக்கிரத்தில் சங்கடங்கள் நேரிடும். கெட்ட பேச்சைப் பேசாமலிருத்தல், கொடுப்பது, பிரதிஞ்ஞையைநிறைவேற்றல், இனிய பேச்சு ஆகிய குணங்கள் சத்துருக்களைக்கூடச் சுவாதீனப் படுத்துகின்றன. 'அப்பிரியம்பேசாதவன் சமர்த்தன் நன்றியுள்ளவன் கபடமில்லாதவன்' என்னும்படி நல்ல குணமுள்ள அரசனுக்குத் திரவியம் இல்லாமற் போனாலும், ஜனங்கள் அவன்பட்சத்திலே சேர்கிறார்கள். தைரியம், பொறுமை, அடக்கம்,சுத்தி, தயை.இனிய பேச்சு, மித்திரத்துரோஹமில்லாமை ஆகிய இந்தக் குணங்கள் ஐசுவரியத்தை வளர்க்கின்றன. பங்கிட்டுக்கொடாமல் தானே சாப்பிடுகிறவனும், துஷ்டமனசு உள்ளவனும், நன்றியில்

லாதவனும், வெட்கமில்லாதவனு மாகிய அரசனைக் கைவிட வேண்டும். எவன் தான் குற்றவாளியாக இருக்கும்போது குற்றமில்லாதவனுக்குக் கோபம் மூட்டுகிருனே, அவனுக்கு, பாம்புள்ள வீட்டில் இரவில் தூக்கம் வராததுபோல் தூக்கம் வராது. எவர்கள் கோபித்தால் யோகக்ஷேமம் கெடுமோ, அவர்களைத் தேவதைகளைப்போல் எப்பொழுதும் உபசரிக்கவேண்டும். ஸ்திரீகள், மதம்பிடித்தவர்கள், ப்ரஷ்டர், நீசர் ஆகிய இவர்களிடம் அகப்பட்டபொருள் நஷ்டமானது தான். ஸ்திரீயையும் சூதாட்டியையும் புத்தியில்லாதவனையும் வைத்துக்கொண்டு எவ்வரசர்கள் இராச்சியம் நடத்துகிருர்களோ, அவர்கள் கல்லை ஆதாரமாகவைத்துக் கொண்டு நீஞ்சுகிறவர்போல் மூழ்கிப்போவார்கள். வேண்டியவளவு காரியஞ்செய்து அக்கிரமத்துக்குப் போகாதவர்கள், பண்டிதர்கள். அதிகப்படியாகப் போனல் கலஹம் நேரிடும். எவனைச் சூதாட்டிகளும் சாரர்களும் வேசியரும் புகழ்வாரோ, அவன் க்ஷேம மடைய மாட்டான். மகாராஜாவே! எவர்கள் பெருவில்லைத் தூக்கி யுத்தஞ்செய்பவர்களோ, மகாபராக்கிரமசாலிகளோ, அந்தப் பாண்டவர்களை விட்டுத் துரியோதனனிடத்தில் பரதவமிசத்து ஐசுவரியத்தை நீர் ஒப்பிவித்து இருக்கிறீர். மகாபலி ஐசுவரியமதத்தால் மூவுலகத்தின் ஆதிபத்யத்தை இழந்தது போல், துரியோதனன் இராச்சியத்தை இழக்கப்போகிருன்; நீர் சீக்கிரம் பார்ப்பீர்.''

திருதராஷ்டிரன் சொல்லுகிருன்:—''நூலிலே கோக்கப்பட்ட பொம்மை ஸூத்திரதாரனுடைய சுவாதீனமாக ஆடுவதுபோல், மநுஷ்யன் ஈசுவரனுடைய சுவாதீனத்தில் ஆடுகிருன்; அப்படியிருக்க, நான் என்ன செய்ய முடியும்? ஆனலும், நீதிகளைச் சொல்லு, கேட்கிறேன்.''

விதுரர் சொல்லுகிருர்:—“பிருகஸ்பதியானுலும் அகாலத்திலே பேசினுல் அவமானம் அடைவான். அப்படியிருக்க, என்னைப்போன்றவரைக் கேட்கவேண்டுமோ? ஆனுலும், நீர் கேட்க விரும்புகிறபடியால், நீதியைச் சொல்லுகிறேன்; கேட்டால் கேளும், விட்டால் விடும். தானத்தாலும் நல்ல வார்த்தையாலும் ஆலோசனைசொல்வதாலும் பலத்தாலும் ஒருவர்க்கொருவர் பிரியமாகிருர்கள். ஆனுல், சுபாவமாகப் பிரியம் வைத்தவர்தான் நண்பர். நான் நிமித்தமில்லாமல் உமக்கு நண்பன். தனக்குவேண்டாதவன் சாதுவாயும் மேதாவியாயும் பண்டிதனுயு மிருந்தாலும், அவ்விதம் தோன்றமாட்டான். வேண்டியவன் குணவீனனுனுலும், சாதுவும் மேதாவியும் பண்டிதனுமாகத்தோன்றுவான். ராஜாவே! துரியோதனன் பிறந்தவுடன் அவனைத் தள்ளிவிட்டு மற்றைய நூறு பெயர்களையும் காப்பாற்றச் சொன்னேன். அதை நீர் கேட்காமையால், எல்லோருக்கும் நாசம் நேரிட்டிருக்கிறது. சூதாட்டத்தில் இராச்சியம் கிடைத்ததைப் பார்த்துச் சந்தோஷப்பட்டீர். அந்தலாபம் இப்போது உம்முடைய ராஜ்யத்தையும் நாசப்படுத்துகிறது. ஆகையால், உமது புத்திரர்களை விட்டுவிடும்; நீர் க்ஷேமம் அடையலாம்.”

திருதராஷ்டிரன்:—“விதுர! நீ சொல்வது, சரிதான். ஆனுலும், புத்திரனைவிட மனமில்லையே! என்ன செய்வேன்?”

விதுரர் சொல்லுகிருர்:—“குணவான் அல்பபதார்த்தத்தை நாசஞ்செய்தாவது அதிகபதார்த்தங்களைக் காப்பாற்ற வேண்டும். நீர் துரியோதனன் ஒருவனுடைய க்ஷேமத்துக்காகப் பிரபஞ்சத்தையே அழிக்கிறீர். அயோக்கியர்களைத் துணையாகச் சேர்த்திருக்கிறீர். அதன்பயன் இந்த நாசம்.

ஞாதிகள் அயோக்கியர்களானுலும்,அவர்களை ரக்ஷிக்கவேண்டும்; அப்படியிருக்க, மகாகுணவான்களான பாண்டவர்களை ரக்ஷிக்கவேண்டு மென்று நான் சொல்லவேண்டியது ஏன்? பாண்டவர்களின் விருத்திக்காகச் சில கிராமங்களைக் கொடுத்தாற்போதும்; அவர்கள் சமாதானமடைவார்கள். க்ஷேமத்தை விரும்புகிறவன் ஞாதிகளுடன் சண்டை செய்யக் கூடாது. அவர்களுடன் கூடி வாழ்வதே சுகம். நான் சொல்லுவது, உமது காதில் விழுகிறதா? சமுத்திரத்தில் விழுந்த பொருள் வீண்; கேளாதவனுக்குச் சொன்ன வார்த்தை வீண்; அயோக்கியன் படித்தது வீண்; சாம்பலில் ஹோமஞ் செய்தது வீண். வணக்கம் அபகீர்த்தியைப் போக்கும்; பராக்கிரமம் சங்கடத்தைப் போக்கும்; பொறுமை கோபத்தைப் போக்கும்; ஆசாரம் அழகில்லாமையைப் போக்கும். வீட்டுப்பதார்த்தங்கள், பிறப்பு, ஆசாரம், போஜனம், வஸ்திரம் இவைகளால் குலத்தை அறியவேண்டும். இஷ்டவஸ்து தானுகக் கிடைத்தால், அதை விரக்தன்கூட வேண்டாமென்று சொல்லக்கூடாது. அப்படி யிருக்கச் சுகங்களில் விருப்பமுள்ளவனுக்குக் கேட்கவேண்டுமோ? புத்திமான்களுடன் கூடி இருக்கிறவனும் வித்துவானும் தருமஞ்செய்கிறவனும் அழகனும் மித்திரர்களோடு கூடியவனும் சத்தியம்பேசுகிறவனு மாகிய நேசனைக் காப்பாற்றவேண்டும். உயர்குலத்திற் பிறந்திருந்தாலும் இழிகுலத்திற் பிறந்திருந்தாலும், எவன் மரியாதையை மீருமலும் தருமமாயும் தயையும் வெட்கமுமுள்ளவனுகவும் இருக்கிருனே, அவன் நற்குலத்தவர் நூறு பேரைக் காட்டிலும் மேலானவன். எவ்விருவருடைய மனசும் ரகசியமும் புத்தியும் ஒன்ருக விருக்கின்றனவோ, அவர்களுடைய நேசம் கெடுகிற தில்லை. எவனுக்குப் புத்தி ஞீ

லேயோ, எவன் துஷ்டபுத்தி யுள்ளவனோ, புல்லால் மூடப்பட்ட கிணற்றைவிட்டு விலகுவதுபோல், அவனைவிட்டு விலகவேணும். கருவமுடையவர்களிடத்திலும் மூர்க்கர்களிடத்திலும் கடுமையானவர்களிடத்திலும் பிடிவாதக்காரர்களிடத்திலும் தருமத்தைவிட்டவர்களிடத்திலும் சிநேகம் வைக்கக்கூடாது. நன்றியுள்ளவன், தருமஞ்செய்கிறவன், சத்தியமே பேசுகிறவன், உதாரமனசுள்ளவன், உறுதியான விசுவாசமுள்ளவன், இந்திரியங்களை அடக்கினவன், மரியாதையாக நடக்கிறவன் ஆகிய குணமுள்ள சிநேகிதர்களை விடக்கூடாது. இந்திரியங்களை அடக்குவது, மரணத்தைக் காட்டிலும் வருத்தமானது; ஆனால், அவைகளைப் போகும்வழியில் விட்டால், தேவதைகளைக்கூட அவை அழித்துவிடும். எல்லாப் பிராணிகளிடத்திலும் தயை, பிறர் மேலே குற்றஞ் சாட்டாமை,பொறுமை,தைரியம், மித்திரர்களை அவமதிக்காமலிருத்தல் என்ற இக்குணங்கள் ஆயுசை வளர்க்கும். அநியாயத்தால் நாசமடைந்த பொருளை நியாயத்தால் மறுபடியும் அடையவிரும்புகிறவன், சமர்த்தன். இனி வரும் துக்கத்துக்குப் பரிகாரம் அறிந்தவனும், அவ்வக்காலத்திற்செய்யவேண்டியகாரியத்தில் மனவுறுதியுள்ளவனும், இதற்குமுன் கெட்டுப்போன காரியத்தைப்பற்றி விசனப்படாமல் மற்றைக் காரியங்களைச் செய்கிறவனும், மேன்மையை அடைவார்.காரியத்தாலும் மனசாலும் பேச்சாலும் எதை அநுஷ்டிக்கிறானோ, அது நல்லதானால், நன்மையை அடைகிறான்;கெட்டதாயிருந்தால் கெடுதியை யடைகிறான். ஆகையால், நல்லதைத்தான் செய்யவேண்டும், நினைக்கவேண்டும்,பேசவேண்டும்.மங்களபதார்த்தங்களைக் கையால் தொடுவது, யோகாப்பியாசஞ்செய்வது, வேண்டிய பதார்த்தங்களுடைய சேர்க்கை, படிப்பு, முயற்சி, ஒழுங்கு, பெரி

யோர்களைநித்தியந்தரிசிப்பதுஇவைகள் ஐசுவரியத்தை வளர்க்கின்றன. விடாமுயற்சி, ஐசுவரியத்துக்கும் லாபத்துக்கும் சுபத்துக்கும் காரணம். விடாமுயற்சி யுடையவன் பெரியோனாகிறான்; அழிவில்லாத சுகத்தையும் அடைகிறான். பெரும் பதவியை அபேக்ஷிக்கிறவனுக்குப் பொறுமையைப் போல நன்மைதருவது வேறொன்றும் இல்லை; அதைக் காட்டிலும் ஐசுவரியத்துக்கும் சுகத்துக்கும் காரணம் வேறு இல்லை. வலிமையில்லாதவனுக்கு அவசியம் பொறுமை வேண்டும். பலசாலியும் தருமத்துக்காகப் பொறுக்க வேணும். எவன் சுகதுக்கங்களைச் சமமாக எண்ணுகிறானோ, அவனுக்குக்கூடப் பொறுமையே நலமானது. தருமத்தையும் இன்பத்தையும் கெடுக்காத சுகத்தை அவசியம் அனுபவிக்கவேண்டியது. தேகத்துக்கு உபத்திரவந்தரும் விரதத்தைச் செய்யவேண்டிய தில்லை. துக்கப்பட்டவன், பித்துப்பிடித்தவன், பாவபுண்ணியங்களை இல்லையென்று சொல்லுகிறவன், சோம்பேறி, முயற்சியற்றவன் இவர்களிடத்தில் லட்சுமி வசிக்கமாட்டாள். நல்லகுணத்தினால் பொறுமை யடைந்திருக்கிறவனைத் துர்ப்புத்திகள் அசக்தன் என்பார்கள். அதிக ஆசாரமுள்ளவன், மிதமிஞ்சிக்கொடுக்கிறவன், அதிகமாய்த் தவஞ்செய்கிறவன், புத்தியினாற் கருவத்தையடைந்தவன் இவர்களுக்கு அருகில் லட்சுமி அண்டமாட்டாள். அவள் அதிககுணசாலிகளிடத்திலும் வசிப்பதில்லை; குணமற்றவர்களிடத்திலும் இருக்கிற தில்லை. பித்துப்பிடித்துக் கண்ணும் தெரியாத பசுவைப்போல் தனக்குத் தோன்றுமிடத்தில்தான் இருப்பாள்.

வேதப்படிப்புக்குப்பயன் அக்கினிஹோத்திரம்; மற்றைப் படிப்புக்குப் பயன் நல்ல குணமும் நல்லநடத்தையும்; ஸ்திரீகளுக்குப்பயன் காமசுகமும் புத்திரர்களும்; தனத்துக்குப்

பயன் பிறருக்குத் தானமும் தான்அனுபவிப்பதும். பாவத்தாற் சம்பாதித்த திரவியத்தால் பரலோகத்துக்கு வேண்டிய காரியத்தைச் செய்துகொண்டாலும்,அதனுல் நற்பயன் கிடைக்காது. தைரியசாலிகளுக்கு, அடர்ந்த காட்டிலும், ஜலத்திலும், கோட்டைகளிலும், கஷ்டகாலங்களிலும், ஆபத்திலும், பரபரப்பிலும், கொல்லும்படி கத்தியைத் தூக்கின காலத்திலும் பயமில்லை. முயற்சி, அடக்கம், சாமர்த்தியம்,ஜாக்ரதை, தைரியம், நினைவு, ஆலோசித்துக்காரியத்தை ஆரம்பித்தல் இவைகள் ஐசுவரியத்துக்குக் காரணம். தபஸ்விகளுக்குத் தபசுதான் வலிமை; பிராமணர்களுக்கு வேதந்தான் வலிமை; அஸாதுக்களுக்குப் பிறரை இம்சிப்பதே வலிமை; குணவான்களுக்குப் பொறுமையே வலிமை. சுத்தஜலம், கிழங்கு, பால், பழம், ஹவிசு,பிராணனைவேண்டுதல்,குருவின்வார்த்தை, ஔஷதம் ஆகிய* எட்டும் விரதத்தைக் கெடுக்கா. தனக்குப் பிரதிகூலமானதைப் பிறருக்கு இடக்கூடாது. இதுதான் முக்கிய தருமம். மற்ற தருமங்கள் சாதாரணமானவை. கோபத்தைப் பொறுமையாலும், அசாதுவை நன்னடத்தையாலும், லோபியைக் கொடுப்பதாலும், பொய்யனைச் சத்தியத்தாலும் வெல்லவேண்டும். ஸ்திரீ, சூதாடுவோன்,சோம்பேறி,பயங்காளி, கோபக்காரன், அகங்காரமுள்ளவன், திருடன், நன்றியில்லாதவன், புண்ணியபாபங்களை நம்பாதவன் இவர்களிடத்திலே நம்பிக்கை வைக்கக்கூடாது. பெரியோர்களுக்கு நமஸ்காரமும் பணிவிடையும் செய்கிறவனுக்கு, கீர்த்தி ஆயுசு பலம் முதலியவை வளரும். எந்தக் காரியம் மிகச்சிரமப்பட்டாவது தருமத்தைவிட்டாவது சத்துருவுக்கு வணங்கியாவது ஆக

* உபவாசதினத்தில் இவ்வெட்டில் ஏதேனும் சம்பவித்தால் விரதத்தைக் கெடுக்காது.

வேண்டுமோ, அதை இச்சிக்கக்கூடாது. வித்தையில்லாத மனுஷ்யனும், பிரசையுண்டாகாத ஸ்திரீபோகமும் ஆகாரமில்லாத பிரசைகளும், அரசனில்லாத ராஜ்யமும் விசனப்படத் தகுந்தவை. மனிதர்களுக்கு வழிநடையால் கிழத்தனம் உண்டாகிறது; மலைகளுக்கு அருவியால் கிழத்தனம்உண்டாகிறது; ஸ்திரீகளுக்குக்கணவனில்லாமையால் கிழத்தனம்உண்டாகிறது; மனசுக்குக் கடும்பேச்சினால் கிழத்தனம் உண்டாகிறது. ஆவ்ருத்திசெய்யாமை வேதத்துக்குக் கேடு; விரதமில்லாமை பிராமணனுக்குக் கேடு. பாஹ்லீகமென்னுந் தேசம் பூமிக்குக் கேடு; மனிதனுக்கு அஸத்தியம் கேடு; பதிவிரதைக்கு உலகவழக்கத்தில் விருப்பம் கேடு; பிறர்வீட்டில் வசிப்பது ஸ்திரீகளுக்குக் கேடு. தங்கத்தின்மலம் வெள்ளி; வெள்ளியின்மலம் நாகம்; நாகத்தின்மலம் ஈயம்; ஈயத்தின்மலம் மலந்தான் [உபயோகமில்லாதது]. * நித்திரையைச் சயனத்தாலும், ஸ்திரீகளைப் போகத்தாலும், அக்கினியை விறகாலும், கள்ளைக் குடியாலும் வெல்லமுடியாது. எவன் தானத்தால் மித்திரனையும், யுத்தத்தால் சத்துருக்களையும், தின்பண்டம் உடை முதலியவைகளால் பெண்டிரையும் சுவாதீனப்படுத்திக்கொள்ளுகிறானோ, அவனுடைய வாழ்வுதான் பயனுள்ளது. ஆயிரம் பொன்னுள்ளவர்களும் பிழைக்கிறார்கள்; நூறு உள்ளவர்களும் பிழைக்கிறார்கள். இவ்வளவு திரவியம் இருந்தால் தான் ஜீவிக்கலாம், இல்லாவிட்டால் இறந்து போவோமென்று இல்லை. ஆகையால், திருதராஷ்டிரா! இந்தப் பேராசையை விட்டுவிடும். இந்தப்பூமியிலுள்ளநெல்

* அவைகளின் ஆசை யனுபவித்துத் தீராது. வைராக்கியத்தால் போதுமென்று நிறுத்தவேணும். இதற்குத் திருஷ்டாந்தம் நெருப்பு.

யவம் முதலிய தானியங்களையும், பொன் வெள்ளி இரத்தி னங்கள், ஸ்திரீகள் முதலிய எல்லாப் போக்கிய பதார்த்தங் களையும், ஒருவனுக்கே கொடுத்தாலும், போதுமென்று தோன்றாது; ஆகையால், விவேகத்தினால் மனத்தை அடக்க வேண்டும். மகாராஜாவே! மறுபடியும் நான் உமக்குச் சொல் லுகிறேன், கேளும். உம்முடைய புத்திரர்களும் பாண்டு வின் புத்திரர்களும் ஸமமாக இருந்தால், அவர்களிடத்தில் ஸமமாக நடவும்.

எவன் பெரியோர்களாற் புகழப்பட்டாலும் கருவங் கொள்ளாமல் தன் சக்திக்குத் தக்கபடி காரியம் செய் கிறானோ, அவனுக்குச் சீக்கிரம் கீர்த்தி கிடைக்கிறது. ஏனெ னில், பெரியோர்கள் பிறருக்கு க்ஷேமத்தை எவ்விதத்தி லும் உண்டுபண்ணுவார்கள். எவன் அதருமத்தால் ஏராள மான திரவியம் கிடைத்தாலும், அது வேண்டாம் என்று தள்ளி அதில் ஆசையில்லாம லிருக்கிறானோ, அவன் தோலை யுரித்த ஸர்ப்பம்போல் துக்கத்தைவிட்டுச் சுகமாக இருப் பான். அஸத்தியத்தால் வெற்றியும், அரசர்வரையில் போகும் கோபமும், குருவினிடத்தில் வஞ்சனையும் இம்மூன்றும் பிரமஹத்திக்கு ஒப்பானவை. மாத்ஸரியம் என்பது மிருத் யுவுக்குச் சமானம். வீணான அதிகப்பேச்சு ஐசுவரியத்தை அழித்துவிடும். குருவுக்குப் பணிவிடை செய்யாமை, ஆத்திரம், தன்னைப் புகழ்ந்துகொள்வது என்ற இந்த மூன் றும் வித்யைக்குச் சத்துருக்கள். சோம்பல், மதம், மோஹம், சாபலம், கூட்டஞ்சேர்வது, கர்வம், அஹங்காரம், லோபம் என்ற இவைகள், வித்தியார்த்திகளுக்குக் கூடா தவை. சுகத்தை விரும்புகிறவனுக்கு வித்யை இல்லை; வித்தியார்த்திக்குச் சுகம் இல்லை: ஒரு சமயத்தில் இரண் டும் கிடைக்கலாம். விறகு இட்டு எரிப்பதனால் நெருப்

யைத் திருப்திசெய்ய முடியாது; நதிகள் சேர்வதனால் சமுத்திரம் நிறைந்துவிடாது; சகலபிராணிகளையும் கொல்வதனால் யமனுக்குப் போது மென்ற எண்ணம் பிறவாது; அப்படியே, ஒருஸ்திரீ சகலபுருஷரையும் கணவராக அடைந்தாலும் மனத்திருப்தி யடையமாட்டாள். ஆசை தைரியத்தையும், யமன் [மரணம்] ஐசுவரியத்தையும், கோபம் திரவியத்தையும், கிருபணத்தன்மை கீர்த்தியையும், காப்பாற்றாமை ஆடுமாடுகளையும் அழிக்கும்; ஒருபிராமணனுடைய கோபம் முழுராச்சியத்தையும் அழித்துவிடும். வெள்ளாடு, வெண்கலம், வெள்ளி, தேன், விஷத்தைப் போக்கும்மருந்து, பறவை, * வேதம்படித்தவன், கிழவனான ஞாதி, சங்கடத்தில் அகப்பட்ட தன்குலத்தவன் என்ற இவர்கள் வீட்டில் இருக்கவேண்டும். வெள்ளாடு, எருது, சந்தனம், வீணை, கண்ணாடி, தேன், நெய், இரும்பு, தாமிரபாத்திரங்கள், சங்கம், சாளக்கிராமம், கோரோசனை என்ற இந்தப்பதார்த்தங்களை, தேவர் பிராமணர் அதிதிகள் என்ற இவர்களுடைய பூசைக்காக வீட்டில் வைத்திருக்கவேண்டும். காமம் குரோதம் பயம் லோபம் என்ற இவைகளால், பிராணனைக் காப்பாற்றுவதற்காகக்கூடத் தன் தருமத்தை விடக்கூடாது. இதுதான், எல்லாப்புண்ணியத்தைக் காட்டிலும் மேன்மையானது. தருமம் சாசுவதம்; சுகதுக்கங்களோ அசாசுவதம். ஜீவன் நித்தியன்; அதற்குக் காரணமானது அநித்தியம். ஆகையால், அநித்தியத்தை விட்டிட்டு நித்தியத்தை அடைந்து ஸந்தோஷ மடைக. ஸந்தோஷந்தான் எல்லாலாபங்களினும் மேலானது. மிக்க வலிமையும் மிக்கபராக்கிரமமும் படைத்த அனேக அரசர்கள், தனதானியங்களால் நிரம்பிய பூமியை ஆண்டு, கடைசியில்

* வைதிகன்.

இராச்சியத்தையும் மிகுதியான சுகங்களையும் விட்டிட்டு, யமனுடைய சுவாதீனத்தி லானுர்கள்; அதை அறிக. மனிதர்கள் பிறந்தபுத்திரனை மிக்க கவலையுடன் வளர்க்கிருர்கள் ; அவன் இறந்துபோனுல், தமது மயிர் அவிழ்ந்தது தெரியாமல் தாம் பரிதாபமாய் அழுதுகொண்டு, அவனை வீட்டைவிட்டுவெளியே மயானத்துக்குக் கொண்டு போய், கட்டையைப்போல் தூக்கிச் சிதையின்மேல் ஏற்றி எரிக்கிருர்கள்; இறந்தவனுடைய தனத்தைப் பிறர் அனுபவிக்கிருர்கள்; அவனுடைய தேகத்தைப் பட்சிகள் தின்னுகின்றன: அல்லது நெருப்பு எரித்துவிடுகிறது. இறந்தவனுடன்கூட வருவது புண்ணியம் பாவம் என்ற இரண்டுதான். புஷ்பமும் பழமும் இல்லாத மரத்தை விட்டுப் பட்சிகள் விலகுவதுபோல், ஞாதிகள் இறந்தவனைவிட்டு விலகுகிருர்கள். சிதையில் இடப்பட்ட மனுஷ்யனுடனே அவன்செய்த நல்ல கருமமும் கெட்ட கருமமுமே போகிறபடியால், ஒவ்வொருவனும் பிரயத்தனப்பட்டுக் கொஞ்சம்கொஞ்சமாகப் புண்ணியத்தைச் சேர்க்கவேண்டும். ராஜாவே! இந்த உலகத்துக்கு மேலும் கீழும் அந்ததாமிஸ்ரம் என்கிற நரகம் இருக்கிறது; அது, அங்கே போனவர்களுடைய இந்திரியங்களுக்கு மிக்கதுக்கத்தைக் கொடுக்கும்; ஆகையால், நீர் அங்குப் போகாமல் இருக்குமாறு நல்வழியில் நடவும்.

நான் உமக்கு மற்றொரு வார்த்தை சொல்லப்போகிறேன்: அதைக் கேட்டு நன்ருய் அறிந்து அதன்படியே செய்வீராகில், நீர் இவ்வுலகில் மிகுந்தகீர்த்தியை யடைவீர்; பரலோகத்திலும் உமக்குப் பயம் அணுகாது. பரத வமிசத்திற் பிறந்தவரே! ஆத்துமாஎன்பது ஒரு நதி; அதற்குப் புண்ணியந்தான் ஜலம். அது ஸத்தியத்திலிருந்து

உற்பத்தியானது; தைரியந்தான் அதற்கு இருகரைகள்; அதன் அலைகள் தயைதான். புண்ணியவான்தான் அதில் ஸ்நானஞ் செய்வான். அவன் அதனுற் சுத்தியடைந்து, மேலும் புண்ணியத்தை யடைகிறுன். லோபமில்லாமை தான் புண்ணிய மென்பது. மேலும்,சம்சாரமென்பது ஒரு நதி. காமம் குரோதம் லோபம் மோஹம் மதம் மாற்சரியம் என்பவை, அதிலுள்ள முதலைகளாம்; பஞ்சேந்திரியங்களும் அதற்கு ஜலம். ஜன்மம் மரணம் என்பன அவற்றுல் நேரிடும் கஷ்டம். அதைத் தாண்டுகிறதற்குத் தைரியமென்பது, ஒருகப்ப லாகும். புத்தி தருமம் வித்யை வயசு என்ற இவைகளால் முதிர்ந்தவனேயும், தன்பந்துஜனத்தையும், உபசரித்துக் காரியாகாரியங்களைக் கேட்கிறவன் கஷ்டமடையமாட்டான். அங்யஸ்திரீகளை விரும்பும் ஆசையையும் கெட்ட பதார்த்தங்களைத் தின்னவேணுமென்னும் விருப்பத்தையும்,தைரியத்தால் அடக்கவேணும். [காமனுக்கும் வயிற்றுக்கும் சுவாதீனமாகக்கூடாது]. கைகளையும் கால்களையும் கண்களால் இரட்சிக்கவேணும்; கண்ணையும் காதையும் மனசால் அடக்கவேண்டும்; மனசையும் பேராசையையும் காரியத்தால் அடக்கவேண்டும். நாள்தோறும் தவருமல் ஸ்நானம் செய்பவனும், யஜ்ஞோபவீதத்தைத் தரிக்கிறவனும், வேதாத்தியயனந்தவருதவனும், பதிதனுடைய அன்னத்தைப் புஜிக்காதவனும், ஸத்தியமே பேசுகிறவனும், குருசிச்ரூஷைசெய்கிறவனு மாகிய பிராமணன், பிரமலோகத்தைவிட்டு, நகரமாட்டான். க்ஷத்திரியன் வேதங்களைப் படிக்கவேணும்; யாகங்களைச் செய்யவேண்டும்; பிரஜைகளை நன்ருய்க் காப்பாற்ற வேணும்; பசுக்களையும் பிராமணர்களையும் காப்பாற்றுவதற்காக யுத்தத்தில் சஸ்திரங்களால் அடிபட்டுப் பிராணனை இழக்கவேண்

டும். இப்படிச் செய்தால், க்ஷத்ரியன் சுவர்க்க மடைவான். வைசியன், வேதம்படித்து, பிராமணர்களையும் க்ஷத்திரியர்களையும் தனத்தால் திருப்தி செய்யவேண்டும்; இஷ்டமித்திரர்களுக்கும் தனம் கொடுக்கவேண்டும்; யாகங்களைச் செய்யவேண்டும்; இப்படிச் செய்த வைசியன் இறந்தபிறகு சுவர்க்க மடைந்து, மிகுந்த சுகத்தை அனுபவிப்பான். சூத்திரன், பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் என்ற இம்மூன்று ஜாதிக்காரர்களையும் அவரவர் யோக்யதைக்குத்தக்கபடி நியாயமாய்ப் பூஜிக்கவேண்டும்; சூத்திரன் இம்மூவரையும் சந்தோஷப்படும்படிசெய்தால், அவன், பாவமெல்லாம் நீங்கிச் சுவர்க்கத்தில் மிகுந்த சுகத்தை அனுபவிப்பான். ராஜரே! நான்கு வருணங்களுடைய தருமத்தையும் உமக்குச் சொன்னேன். அதற்குக் காரணம் சொல்லுகிறேன், கேளும். பாண்டுபுத்திரராகிய யுதிஷ்டிரருக்கு நீர் ராஜ்யம் கொடுக்காததால், க்ஷத்திரியதருமம் இல்லாமற்போகிறது; அவரை ராஜதருமத்தில் நிறுத்தும். அப்படி நீர் செய்யாவிடில், பாண்டவர்கள் யுத்தஞ்செய்து உம்முடைய புத்திரர்களைக் கொன்றுவிடுவார்கள்.''

திருதராஷ்டிரன்:—''விதுர! நீ எனக்கு உபதேசித்த தருமம் அடிமுதல் நுனிவரைக்கும் யுக்தந்தான். நானும் அப்படியே எண்ணுகிறேன். பாண்டவர்கள்விஷயத்தில் எனக்கு இருக்கும் நல்லபுத்தி துரியோதனனைப் பார்த்தவுடனே மாறிப் போகிறது. விதுரா! எந்தப் பிராணியாலும் தெய்வத்தை அதிக்கிரமிக்க முடியாது; தெய்வந்தான் மேலானது. மனுஷ்யயத்தனம் பிரயோசனமற்றது என்று நான் எண்ணுகிறேன்'' என்றான்.

பிறகு, திருதராஷ்டிரன் விதுரரை வேதாந்தவிஷயத்தைத் தனக்கு உபதேசஞ் செய்யும்படி கேட்டான். அத

ற்கு, விதுரர், "நான் சூத்திரஸ்திரீயின் வயிற்றிற் பிறந்த படியால் வேதாந்தத்தை உபதேசஞ் செய்யக்கூடாது. பிரமாவின் மானசபுத்திர ராகிய ஸநத்ஸுஜாதர் உபதேசஞ் செய்வார்" என்றார்.

திருதராஷ்டிரன், "விதுரா! ஸநத்ஸுஜாதர் எங்கே இருக்கிறார்? நான் அவரை எப்படிப் பார்ப்பேன்? அவர் எப்படி எனக்கு உபதேசஞ்செய்வார்?" என்றான்.

இதைக்கேட்ட விதுரர் அந்த ரிஷியைத் தியானித்தார்; அவரும் விதுரர் தம்மை நினைத்ததை யறிந்து, அங்கு வந்து சேர்ந்தார். விதுரர் ஸநத்ஸுஜாதமஹரிஷியை விதிப்படி உபசரித்துக் குசலப்ரச்னம் செய்து, "திருதராஷ்டிரருடைய மனத்தில் சில ஸந்தேஹங்கள் இருக்கின்றன; அவைகளைத் தாங்கள் தீர்க்கவேண்டும்" என்றார். அப்பொழுது ரிஷியின் ஆஞ்ஞையால், * திருதராஷ்டிரன் தனக்குள்ள சந்தேகங்களை யெல்லாம் கேட்டுத் தீர்த்துக் கொண்டான்.

### ஸஞ்ஜயன் தான் பாண்டவரிடம் போய்வந்த செய்தி தெரிவிக்கை.

இவ்விதம் இரவு கழிந்த பிறகு, மறுநாள் எல்லோரும் ஸ்நானம் அனுஷ்டானம் போஜனம் முதலிய காரியங்களைச் செய்துகொண்டு, சபைக்கு வந்தார்கள். ஸஞ்ஜயனும் வந்து சேர்ந்தான். திருதராஷ்டிரனுடைய அனுமதியின்மேல் பாண்டவர்களுடைய விருத்தாந்தத்தை ஸஞ்ஜயன் பின்வருமாறு சொல்லலானான்: "மகாராஜாவே! சொல்லுகிறேன், கேளும். உம்மிடம் விடைபெற்று உபப்பிலாவியத்துக்குப்

* திருதராஷ்டிரனுக்கு ஸநத்ஸுஜாதர் உபதேசித்த வேதாந்தத்துக்கு ஸநத்ஸுஜாதீயம் என்று பெயர். அது தனியாக அச்சிடப்படும்.

போனேன். அங்கு, அர்ஜ்ஜுநனும் ஸ்ரீகிருஷ்ணபகவானும் இருக்கும் இடத்தில் முதலிலே பிரவேசித்தேன். அந்த அந்தப்புரத்தில் அர்ஜ்ஜுநன் கிருஷ்ணபகவான் திரௌபதி ஸத்தியபாமை என்ற இந்த நால்வரும் இருந்தார்கள். அபிமன்யுவும் நகுலஸஹதேவரும் வரக்கூடாத இடத்தில் வரும்படி அவர்கள் எனக்கு அனுமதிதந்தார்கள். அவ்விருவரும், உத்தமமான ரஸாயனங்களைக் குடித்துச் சிவந்தகண்களைப் பெற்றும், ஸுகந்தமான சந்தனம்பூசியும், கமகமவென்று பரிமளம் வீசும் பூமாலையை முடியில் தரித்தும், அழகிய வஸ்திரங்களை யுடுத்தும், ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றும் ரத்நமிழைத்த சுவர்ணாஸனத்தில் இருந்தார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவான் ஸத்தியபாமாதேவியின்மடியில் தமது தலையை வைத்துக்கொண்டு படுத்திருந்தார். அர்ஜ்ஜுநன் பகவானுடையபாதங்களைத் தமது மடியில் வைத்துக்கொண்டிருந்தார். திரௌபதி அர்ஜ்ஜுநனுடைய பாதசேவையைச் செய்துகொண்டிருந்தாள். அர்ஜ்ஜுநனுடைய கட்டிலின் மேல் வேலைக்காரிகள் எனக்குச் சுவர்ணாசனம் கொணர்ந்து இட்டார்கள். நான் அதைக் கையால் தொட்டுவிட்டுப் பூமியில் உட்கார்ந்தேன். இரண்டு ஸ்திரீரத்நங்களுடன் கூடிய இரண்டு புருஷரத்நங்களைப் பார்த்தபோதிலும், என்மனத்தில் யாதொருகல்மஷமும் தோன்றவில்லை. திருதராஷ்டிரா! அவ்விருவரும் ஓரேசயனத்தி லிருப்பதைப் பார்த்து, எனக்குப் பயம் நேரிட்டது; தேகம் சிலிர்த்தது. "அந்த இரண்டு திவ்வியபுருஷர்களான நரநாராயணர்கள் [அர்ஜ்ஜுநனும் கிருஷ்ணமூர்த்தியும்] எவனுடைய கட்டளைக்கு உட்பட்டிருக்கிறார்களோ, அந்தத் தருமபுத்திரருடைய எண்ணம் ஏன் நிறைவேறாது?" என்று தோன்றிற்று.

நான் தலையில் கைகூப்பிக்கொண்டு, இருவரிடமும் தங்கள்கட்டளைமுழுமையையும் சொன்னேன். அதைக் கேட்டவுடனே, கிருஷ்ண பகவான் எழுந்து மிருதுவான வார்த்தையைச் சொன்னார்; அது உங்களுக்கு மிகவும் கெடுதலானது. பகவான் சொன்னதாவது:—என் வார்த்தையைச் சபையில் பீஷ்மர் துரோணர் முதலிய பெரியோர்கள் கேட்கும்போது சொல்லு. தார்த்தராஷ்டிரரே! நீங்கள் என்னுடனும் அர்ஜ்ஜுநனுடனும் துவேஷம் கொண்டிருக்கிறீர்கள். அர்ஜ்ஜுநனுடைய காண்டீவதனுசை வளைக்கக் கூட உங்களால் முடியாது; அவன் உங்களுடன்போர்செய்ய வருகிறான். ஆகையால், பாண்டவர்களுக்குள்ள ராஜ்யத்தைக் கொடுத்துவிடுங்கள். உங்கள் பெண்டிர் பிள்ளைகளுடன் சுகமாக இருங்கள்; இல்லாவிட்டால், துச்சாசனன் வஸ்திராபஹாரத்துக்கு யத்தனித்த காலத்தில், திரௌபதி, 'கோவிந்தா!' என்று என்னைக்கூவினாளே; அதனால், எனக்கு உங்கள்மேல் உண்டான கோபம் இன்னும் என் மனத்தை விட்டு நீங்கவில்லை என்பது."

திருதராஷ்டிரன்:—"ஸஞ்சய! என்புத்திரர்களை ஸம்ஹாரஞ் செய்யப் போகிறவனும் மகாபலசாலியுமான அர்ஜ்ஜுநன் என்ன சொன்னான்? அதை நான் கேட்க விரும்புகிறேன்: சொல்" என்றான்.

ஸஞ்ஜயன்:—"யுத்தத்தில் விருப்பமுடைய அர்ஜ்ஜுநன் யுதிஷ்டிராருடைய உத்தரவின்மேல் கிருஷ்ணன் கேட்டுக்கொண்டிருக்கும்போது கொஞ்சமேனும் அதைரியமில்லாமற் சொன்ன வார்த்தைகளைச் சொல்லுகிறேன்; நீர் கேளும்: துரியோதனனும் கேட்கட்டும். அர்ஜ்ஜுநன் சொன்னதாவது:—ஸஞ்ஜய! யுதிஷ்டிரர் வனவாசத்தில் பல இரவுகளில் துக்கத்துடன் படுத்திருந்திருக்கிறார். அதற்குப்

பதிலாக, நான் துரியோதனனுக்கு அதைக்காட்டிலும் துக்கமுண்டாகும்படி, மறுபடியும் எழாத படுக்கையில் அவனைப் படுக்கவைக்கப்போகிறேன். இவ்வளவு காலம் கழிந்தபிறகு, யுதிஷ்டிரர், குரோதத்தை, அயோக்கியர்களான தார்த்தராஷ்டிரர்களின்மேல் காட்டப்போகிறார்: அப்போது, துரியோதனன் தவிப்பான். பீமசேனன் தன் கையிலே கதாயுதத்தை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் யானைக்கூட்டங்களை துவம்சம் பண்ணும்போது துரியோதனன் பச்சாத்தாபப்படுவான். திருதராஷ்டிரகுமாரர்கள் எங்களுக்கு ஏற்பட்ட பாகத்தைக் கொடுத்துவிட்டால், க்ஷேமமடைவார்கள்; இல்லாவிட்டால், கர்ணன் துச்சாசனன் முதலானவர்களைக் கொன்று துரியோதனனையும் ஸம்ஹரித்து, நாங்கள் ராஜ்யம் முழுவதையும் அடைவோமென்று சொல்லு என்பது. திருதராஷ்டிரா! நான் ஸத்யமாகச் சொல்லுகிறேன்; பாண்டவர்களுடன் யுத்தஞ் செய்தால் கௌரவர்கள் மிஞ்சமாட்டார்கள்'' என்றான்.

இதைக் கேட்டு, பீஷ்மர் துரோணாசாரியர் முதலியவர்களும் திருதராஷ்டிரனைப் பார்த்து, "சமாதானமடைவதே நலம்'' என்று சொன்னார்கள். திருதராஷ்டிரன் துரியோதனனை அழைத்துச் சொல்லியும், அவன் சமாதானத்துக்குச் சம்மதிக்கவில்லை.

### க்ருஷ்ணன் தூது.

ஸஞ்சயன் ஹஸ்தினபுரத்துக்குத் திரும்பிப்போன பிறகு, யுதிஷ்டிரர், பிராதாக்களையும் கிருஷ்ணனையும் அழைத்து ஆலோசித்தார்: "கிருஷ்ண! உன்னுடைய அனுக்கிரஹம் எங்களுக்குப் பூர்ணமாக இருக்கும்போது, யுத்தத்தில் எங்களுக்குஜயம் கிடைப்பது நிச்சயம்; ஆனால், துரியோதனன் முதலிய நூறு பிராதாக்களையும், பீஷ்மர் பாஹ்லீகர்

பூரிசிரவஸ் முதலிய பெரியோர்களையும், துரோணசாரியர் கிருபாசாரியர் முதலிய பிராமணர்களையும், இஷ்டமித்திர பந்துஜனங்களையும் யுத்தத்தில் கொன்று, நான் ராஜ்யம் அடைவதைக் காட்டிலும் ராஜ்யமில்லாமலிருப்பதே நல்லதென்று எனக்குத் தோன்றுகிறது. ஆகையால், நீ ஹஸ்திநபுரத்துக்குப் போய் உன்னால் கூடிய யத்தனங்களைச் செய்து ஸந்திசெய்துவா. கௌரவர்கள் எங்களுக்கு ஐந்து கிராமங்கள் கொடுத்து விடட்டும்: போதும். எப்படியாவது ஸந்தி செய்து வா'' என்றார். இதைக்கேட்ட பீமசேனன்முதலியவர் தமது அபிப்பிராயத்தைச் சொன்னார்கள். அவற்றையெல்லாம் கேட்ட கிருஷ்ணன், ''யுதிஷ்டிரா! வஞ்சனையில்லாமல், கூடியமட்டும் ஸந்திக்கு நான் யத்தனஞ் செய்கிறேன். ஆனால், ஸந்தியாகப் போகிறதில்லை'' என்று சொன்னார்.

இவற்றையெல்லாம் கேட்டிருந்தவளும் கறுத்து நீண்ட தலைமயிரையுடையவளும் கட்டழகியும் ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் பரமபக்தையுமான திரௌபதி, ஸ்ரீ கிருஷ்ணனருகில் வந்து அவரை நோக்கி, ''ஸ்ரீகிருஷ்ணா! கௌரவர்கள் கபடமாக எங்கள் இராச்சியத்தை அபகரித்துக்கொண்டு எங்களை வனத்துக்குத் துரத்தினது, உமக்குத் தெரியுமா? அந்தத் துரியோதனனை, அந்த அயோக்கியமான காரியத்துக்கு உதவியாக இருந்தவர்களுடன் கூட யுத்தத்தில் கொல்வதே தருமம். கிருஷ்ணா! நான் உம்மிடத்திற் சொல்லலாமென்ற முழுநம்பிக்கையுடன் சொல்லுகிறேன். என்னைப் போன்ற பெண் யாராவது இருப்பாளா? நான் மனுஷ்யர்வயிற்றிற் பிறவாதவள்; ஹோமகுண்டத்திலிருந்து உண்டானவள்; துருபதருடைய பெண். திருஷ்டத்யும்நனுடைய சகோதரி; உம்முடைய பிரியமான

சினேகிதை; அஜமீட வம்சத்தில் வாழ்க்கைப் பட்டேன்; பாண்டு மஹாராஜாவின் மருமகள்; ஐந்து இந்திரர்போன்ற பஞ்சபாண்டவர்களுடைய பட்டமஹிஷி; ஐந்துவீரர்களுக்குத் தாய். அபிமந்யு உமக்கு எப்படியோ, அப்படியே எனக்கும்* மருமகன். இவ்வளவுமகிமை பொருந்திய என்னை, பாண்டவர் பார்த்துக்கொண்டிருக்கும் போது, நீரும் பாஞ்சாலர்களும் பிழைத்திருக்கும்போது, தலைமயிரில் கைபோட்டுப் பிடித்துப் பாவிகள் சபையில் அழைத்து வந்தார்களே! பீஷ்மருக்கும் திருதராஷ்டிராருக்கும் மருமகளான நான் அவர்களுக்கு அடிமையான வேலைக்காரியானேனே!!பீமசேனனுடைய கதாயுதமும் அர்ஜ்ஜுநனுடைய காண்டீவதனுசும் வீண். என்னை அவமானஞ் செய்த துரியோதனன் ஒருமுகூர்த்தகாலமாவது பிழைக்க லாமா? உமக்குள்ள கோபத்தைத் துரியோதனனிடத்தில் காண்பிக்கவேண்டும். பீமசேனனுக்கும் அர்ஜ்ஜுநனுக்கும் தைரியம் போயிற்று; அவர்கள் ஸந்தியை விரும்புகிறார்கள். அவர்கள் சும்மா இருக்கட்டும். கிழவரான என் பிதா யுத்தஞ் செய்வார்; என்சகோதரரும் ஐந்துபுத்திரர்களும் அபிமந்யுவும் யுத்தஞ் செய்வார்கள். என் தலைமயிரைப் பிடித்திழுத்த பாவி துச்சாசனனுடைய கை அறுபட்டுத் தூசியில்வீழ்ந்து துடிப்பதைப் பாராவிட்டால், என் மனம் சமாதானமடையாது. நான் கோபத்தை மனசில் அடக்கிப் பதின்மூன்று வருஷங்கள் காத்திருந்தேன். இப்படியிருக்க, என் பர்த்தா பீமசேனன் சந்தி பேசுவது கண்டு மனம் வெடிக்கிறது'' என்று சொல்லி, விசனந்தாங்காமல் வெப்பமாகக் கண்ணீர்விட்டுக் கோ வென்று அழுதாள்.

---

* நான் உமக்குச் சகோதரியானபடியால், சுபத்திரை எனக்கும் சகோதரிதான், சக்களத்தி முறையல்லள் என்பது குறிப்பு.

அதுகண்ட கிருஷ்ணன், "கிருஷ்ணே! நீ விசனப்படாதே; கண்ணீரை அடக்கு; உன் சத்துரு ஸ்திரீகள், கணவரையும் பந்துக்களையும் இழந்து அழுவதைச் சீக்கிரத்திற் பார்ப்பாய். உன்னுடைய கோபம் அவர்களுக்கு க்ஷேமத்தைத் தராது. யுதிஷ்டிரருடைய ஆஞ்ஞையின்மேல் பீம அர்ஜ்ஜுன நகுலஸஹதேவர்களை வைத்துக் கொண்டு, அந்தக் கௌரவர்களை நாசஞ்செய்யுங் காரியத்தைச் செய்கிறேன். தார்த்தராஷ்டிரர்களுக்கு விநாசகாலம் சமீபித்திருக்கிறது. அவர்கள் அடிபட்டுக் கீழே விழப்போகிறார்கள். நரிகளும் நாய்களும் அவர்களைக் குத்தித் தின்னப்போகின்றன; நீ பார்ப்பாய். இமயமலை அசைந்தாலும், பூமி வெடித்தாலும், நக்ஷத்திரங்களோடு ஆகாயம் கீழே விழுந்தாலும், சமுத்திரம் வற்றினாலும், என் வார்த்தை பொய்யாகாது. கிருஷ்ணே! நான் ஸத்யமாய்ப் பிரதிஜ்ஞை செய்கிறேன்; கண்ணீரை யடக்கு; உன்னுடைய பர்த்தாக்கள் சத்துருக்களை ஸம்ஹாரஞ்செய்து ஐசுவரியத்தை அடையப்போகிறார்கள்: நீ சீக்கிரம் பார்ப்பாய்" என்று சமாதானப்படுத்தினார்.

மறுநாட்காலையில் புண்டரீகாக்ஷன் எழுந்து, ஸ்நானஞ்செய்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு அக்கினிஹோத்திரஞ் செய்து பிராமணர்களை நமஸ்காரம் பண்ணி, அக்கினியைப் பிரதட்சணஞ்செய்து ஹஸ்தினாபுரிக்குப் புறப்பட்டார்.

சைப்பியம் சுக்கிரீவம் மேகபுஷ்பம் வலாஹகம் என்னும் நான்குகுதிரைகள் கட்டப்பட்டும், தாருகனால் ஓட்டப்பெற்றும், சங்கம் சக்கரம் கதை நந்தகம் முதலிய ஆயுதங்களால் நிரம்பியும், கருடத்துவஜத்தோடு கூடியும், மெதுவான வேங்கைத்தோலால் பரப்பப்பெற்று மிருந்த

ரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் சாத்தகியுடன் உட்கார்ந்தார். யுதிஷ்டிரர் கிருஷ்ணனுக்குத்துணைக்காகப் பத்துமகாரதர்களையும் ஆயிரங்குதிரைகளையும் யானைகளையும் பதாதிகளையும் அனுப்பினார். அவர் புறப்படுஞ் சமயத்தில், அனேக சுப சகுனங்கள் தோன்றின. மார்க்கத்தில் வசிஷ்டர் வாமதேவர் சுகர் நாரதர் வால்மீகி குசிகர் பிருகு முதலிய அனேக ரிஷிகள் 'பகவான் வருகிறார்' என்பதை ஞான திருஷ்டியால் அறிந்து, இடைவழியில் வந்து அந்த ஸ்ரீ கிருஷ்ணபகவானைத் தரிசித்து ஸ்தோத்திரஞ் செய்தார்கள். பகவான், மஹாரிஷிகளைப் பார்த்து இரதத்தை விட்டுக் கீழே இறங்கி, "ரிஷிகளே! நீங்கள் எங்கே போகிறீர்கள்? எதற்காக இங்கே வந்தீர்கள்?" என்று கேட்டார். அவர்கள் "கிருஷ்ணா! நீர் கௌரவர்களுடைய சபையிலே, மகா புத்திசாலிகளான பீஷ்மர் துரோணர் கிருபர் விதுரர் இவர்களின் எதிரே இனிமையான தருமப்பேச்சுக்களைப் பேசப் போகிறீரன்றோ! அவற்றை நாங்கள் கேட்க விரும்பி வருகிறோம். கிருஷ்ணா! நீர் எங்களுக்காகக் காத்திருக்கவேண்டாம். நாங்கள் சபையில் வந்து உம்மைத் தரிசிக்கிறோம்" என்று சொல்லிப் போய்விட்டார்கள்.

கிருஷ்ணன் போகும்போது, மார்க்கத்திலுள்ள கிராமங்களிலிருந்து நான்கு வர்ணத்துப் புருஷர்களும் ஸ்திரீகளும் அந்தப்பகவானைப் பூஜித்தார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவான் மார்க்கத்தில் விருகஸ்தலம் என்னும் ஓர் இடத்தில் இறங்கி, மறுநாள் சென்றார்.

கிருஷ்ணன் புறப்படுவதற்கு முன்னமே, திருதராஷ்டிரன், கிருஷ்ணன் இறங்குவதற்காக, மார்க்கத்தில் பங்காளாக்களை நிர்மாணஞ் செய்திருந்தான்: கிருஷ்ணன் அவைகளில் இறங்காமல் அங்கங்கே யிருக்கும் பக்தர்களின் இடங்

களிலேயே இறங்கிப் பிராமணர்களுக்கு நல்ல போஜனமும் யதேஷ்டமாகத் திரவியமும் கொடுத்து, ஹஸ்திநபுரத்துக்கு வந்து சேர்ந்தார். கிருஷ்ணன் தன் பட்டணம் வந்து சேரும் முன்னமே, திருதராஷ்டிரன், விதுரரை வரவழைத்து, ''விதுர! கிருஷ்ணன் இங்கே நாளை வரப்போகிறாராம்; அவர் இறங்கும்படி உத்தமமான பங்களாவைச் சித்தஞ் செய்திருக்கிறேன். அவர் மூவுலகத்துக்கும் அதிபதி. அவருக்கு, நான், தேவர் உபசரிப்பது போல உபசாரஞ்செய்யப்போகிறேன்; அனேக உத்தமங்களான யானைகளையும் குதிரைகளையும் ரதங்களையும் கொடுக்கப்போகிறேன். சால்வை துப்பட்டாக்கள் முதலிய விலையுயர்ந்த வஸ்திரங்களையும், உத்தமமாயும் மிகவும் மிருதுவாயுமுள்ள புலித்தோல்களையும் கொடுப்பேன். விதுர! இந்த ரத்நத்தைப் பார்த்தாயா? இது இருக்குமிடம் பகலாகவே தோன்றும்; இது, மிக்க ஒளியுள்ளது; இதனைக் கிருஷ்ணனுக்குத் தந்திடுவேன். அவர்பொருட்டாக அனேக வகையான பக்ஷயங்களையும் வியஞ்சனங்களையுமுடைய அறுசுவையுள்ள போஜனம் செய்திடுகிறேன்.

பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் ஆகிய நான்குவர்ணத்தாருடனும் புரோஹிதர் மந்திரிகள் புத்திரர் பௌத்திரர் முதலிய பரிவாரத்துடனும் கால்நடையாகவே கிருஷ்ணனை எதிர்கொண்டுபோவேன். நல்ல ஆடைகளைத் தரித்துக்கொண்டு, உத்தமமான ஆபரணங்களைப் பூண்டு, ரத்நங்களிழைத்த ஓலைகளால் ஒளிமிகுந்த கன்னங்களோடும் அன்னப்பக்ஷிபோல் இனிமையாகச் சத்திக்கும் பாதசரங்களோடும் கூடிய வேசியர்கள் கையில் ஆரத்தியை எடுத்துக்கொண்டு கிருஷ்ணனை எதிர்கொள்வார்கள்; துரியோதனன்மாத்திரம் வரமாட்டான்.

விதுர! அவர்வரும் மார்க்கத்தில் ஜலந்தெளித்து வாழைமரங்களையும் தோரணங்களையும் மாங்கொத்துக்களையும் பாக்குக்கொத்துக்களையும் கட்டி அலங்கரிக்கவேண்டும். என்னிடமுள்ள உத்தமபதார்த்தங்களை அவருக்கு ஸமர்ப்பிப்பேன்" என்று சொன்னான்.

விதுரர், "மகாராஜா! நீர் இப்படிச்செய்வதால் பெருங்கீர்த்திபெறுவீர். ஆனால், நீர் கொடுப்பதாக நினைத்தது மனப்பூர்த்தியாகச்சொன்ன தன்று. அவருக்குக் கொடுத்து அவரை ஏய்த்துச் சுவாதீனப்படுத்துவதாக நினைத்திருக்கிறீர். அப்படியும் ஸமயத்தில் நீர் கொடுக்கப்போகிறதும் இல்லை; அவர் உம்முடைய அதீனமாகப்போவதும் இல்லை. அவர், பாண்டவர்களுக்கு க்ஷேமத்தைச் செய்ய விரும்பி வருகிறார்; அதைச் செய்தால், அவருக்கு அநேக மரியாதைகளைச் செய்தாற்போல் ஆகும். அவர் சொல்வது போல நீர் நடப்பது, பாண்டவர்களுக்குமாத்திர மல்ல; உம்முடைய புத்திரர்களுக்கும் ஸகல ஜகத்துக்கும் க்ஷேமம். பாண்டவர்கள் அதிகமாக ஆசைப்படுவதில்லை; ஐந்து கிராமங்களை அவர்கள் விரும்புகிறார்கள். அவைகளைக் கொடுத்துக் கிருஷ்ணனைச் சந்தோஷப்படுத்தும்" என்றார்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் விருகஸ்தலத்தில் அதிகாலையில் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, பிராமணர்களுக்கு நித்தியதானஞ்செய்து, இரதத்தில் உட்கார்ந்து ஹஸ்தினபுரத்துக்கு வந்துசேர்ந்தார்.

பட்டணத்துஜனங்க ளெல்லோரும், நான்குவருணத்தாரும் ஆண்பெண்களடங்கலும் ஸ்நானஞ்செய்து சுத்த வஸ்திரம்உடுத்து அலங்கரித்துக்கொண்டு, கிருஷ்ணனை எதிர்கொள்ளும்படி புறப்பட்டார்கள். பாவி துரியோதனன் ஒருவன்தான் போகவில்லை. ராஜமார்க்கத்திலுள்ள

எல்லாவீடுகளும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. ஸ்திரீகள் மாடிகளில் ஏறிக் கிருஷ்ணனைத் தரிசித்தார்கள்.

முதலில், கிருஷ்ணன், திருதராஷ்டிரனுடைய அரண்மனைக்குப் போனார். திருதராஷ்டிரன், துரோணாசாரியர் பீஷ்மர் கிருபர் முதலியவர்களோடு எதிர்கொண்டான். கிருஷ்ணன் தக்கபடி எல்லோரையும் பார்த்துக் குசலப் பிரசினம் செய்தார். உத்தமமான ஸுவர்ணாஸனத்தில் கிருஷ்ணபகவான் உட்கார்ந்தார். திருதராஷ்டிரனுடைய ஆஜ்ஞையின்படி, புரோஹிதர், கிருஷ்ணனுக்கு அருக்கியம் பாத்தியம் ஆசமனீயம் மதுபர்க்கம் முதலிய பூஜைகளைச் செய்தார்.

கிருஷ்ணன் அங்கிருந்து விடைபெற்று, விதுரருடைய மனைக்குச் சென்றார். விதுரர் பகவானுக்கு ஸகல பூஜைகளையும் செய்தார். கிருஷ்ணன் விதுரருடையவீட்டிலேயே போஜனஞ்செய்துகொண்டு, தமது அத்தையாகிய குந்திதேவியைப் பார்க்கும்படி ஸாயங்காலம் அவள்வீட்டுக்குச் சென்றார். அங்கு அவளுக்குப் பாண்டவர்களுடைய வனவாஸம்முதல் நடந்த எல்லா வரலாற்றையும் சொல்லி அவளைச் சமாதானப்படுத்தினார்.

கிருஷ்ணன், அத்தையினிடம் விடைபெற்றுக் கொண்டு, துரியோதனனுடைய அரண்மனைக்குப் போனார். அங்கே துரியோதனன், துச்சாசனன் கர்ணன் சகுனி முதலானவர்களுடன் உட்கார்ந்திருந்தான். துரியோதனன் அவர்களுடன் எழுந்து கிருஷ்ணனுக்கு ஆசனங்கொடுத்து மதுபர்க்கபூஜையைச் செய்தான்.

பின்பு, துரியோதனன், "கிருஷ்ண! உமக்காக ஸகல போஜனபதார்த்தங்களுடனும் படுக்கைகள் ஆசனங்கள் இவற்றுடனும் ஒருமாளிகை சித்தஞ் செய்திருக்க, இதைநீர்

அங்கீகரிக்காமலிருப்பதற்குக்காரணம் என்ன? நீர் எங்களுக்கும் பாண்டவர்களுக்கும் பொதுவானவர்; திருதராஷ்டிரருக்குப் பரம சினேகிதர்: இப்படி யிருக்க, இதை எல்லாம் அநாதரஞ் செய்யக் காரணம் என்ன? சொல்லும்" என்று இப்படி பேச்சினால் மிருதுவாயும் அர்த்தத்திலே கடினமாயும் இருக்கும்படி சொன்னான்.

கிருஷ்ணன்:—"துரியோதன! நான் இப்போது பாண்டவர்களுடைய தூதனாக வந்திருக்கிறேன். என் யஜமானனுடைய காரியம் முடிந்த பிறகு, உன்னுடைய அதிதிபூஜையைப் பெற்றுக்கொள்ளுகிறேன்."

துரியோதனன்:—"கிருஷ்ண! நீர் செய்தது சரியல்ல. உம்முடைய காரியம் முடிகிறதோ, முடிகிற தில்லையோ; நாங்கள் உமக்குச் செய்த பூஜையைப் பெற்றுக்கொள்ள வேண்டியது. உமக்கும் எங்களுக்கும் துவேஷமும் இல்லை, சண்டையும் இல்லை; ஆகையால், நீர் இப்படிச் சொல்வது யுக்தமல்ல."

கிருஷ்ணன் :—"துரியோதன! நான் விருப்பத்தாலும் கோபத்தாலும் துவேஷத்தாலும் ஆக்கிரஹத்தாலும் லோபத்தாலும் தருமத்தை விடமாட்டேன். உன் வீட்டில் போஜனஞ் செய்யாததற்குக் காரணம் சொல்லுகிறேன், கேள். ஒருவன்வீட்டிலே போஜனஞ் செய்வதற்கு இரண்டு காரணங்கள்: பிரீதி யென்பது முதல்காரணம்; இரண்டாவது ஆபத்து. என்மேல் நீ பிரீதி செய்கிறவன் அல்லை; எனக்கோ சாப்பிடுவதற்கு அன்னமில்லாத ஆபத்தும் நேரிடவில்லை. மேலும், சத்துருவின் அன்னத்தைச் சாப்பிடக்கூடாது. சத்துருவுக்குச் சாப்பாடும் போடக்கூடாது. நீயோ பாண்டவர்களைப் பகைக்கிறாய்: அவர்கள் எனக்கு உயிரானவர்கள். நீ காரணமில்லாமலே பால்யம்

முதல் பாண்டவர்களைப் பகைக்கிறாய். அவர்கள் உன்மேல் நேசம் வைத்தவர்கள்; தருமமார்க்கத்தில் இருப்பவர்கள். அவர்களைத் துவேஷிக்கிறவன் என்னையும் துவேஷிக்கிறவன் தான்; அவர்களுடைய நண்பன் எனக்கும் நண்பன். நீ கேவலம் காமக்குரோதங்களாலும் மோஹத்தாலும் அவர்களைப் பகைக்கிறாய். குணசாலிகளைத் துவேஷிக்கிறவன் புருஷாதமன். நல்ல குணமுள்ள ஞாதிகளைத் துவேஷிக்கிறவன் க்ஷேமமடையமாட்டான். ஆகையால். அவர்களுக்கு நீ இதஞ்செய்தால், கீர்த்தியையும் க்ஷேமத்தையும் அடைவாய்.''

துரியோதனன்:—''கிருஷ்ண! இருக்கட்டும்; பீஷ்மர் துரோணர் பாஹ்லீகர் முதலானவர்களை விட்டு, சூத்திரனை விதுரன் வீட்டில் ஏன் போஜனஞ்செய்தீர்? அது ஆபத்துக்காலத்தி லல்லவா செய்யத்தகுந்தது?''

கிருஷ்ணன்:—'' எல்லாச்சூத்திரர்களும் சூத்திரர்கள் அல்லர். அவர்கள் பகவானிடத்தில் பக்தியுள்ளவர்களாயிருந்தால், பிராமணர்களுக்குச் சமானர்களேயாவர். பகவானிடத்தில் பக்தியில்லாதவர்கள் எந்தக் குலத்தாராலும் எந்த வருணத்தாராலும் அவர்கள் மிகவும் இழிவானவர்கள். ஆகையால், பரமபாகவதரான விதுரருடைய அன்னந்தான் புஜிக்கத்தகுந்தது. துஷ்டனான உன்னோடு சேர்ந்த மற்றவர்களுடைய அன்னம் சாப்பிடத் தகுந்த தல்ல'' என்று சொல்லி விட்டு, எழுந்து விதுரருடைய வீட்டிற்குப் போய் விட்டார்.

துரோணர் கிருபர் பீஷ்மர் பாஹ்லீகர் மற்றுமுள்ள கௌரவர்முதலியோர், கிருஷ்ணனுடைய தரிசனத்துக்காக விதுரர்வீட்டுக்குப் போய், ''கிருஷ்ண ! எங்களுடைய வீடுகள் அவற்றிலுள்ள ரத்நம் முதலிய ஸகல பதார்த்தங்கள்

இவை எல்லாவற்றையும் தங்களுக்கே தந்திருக்கிறோம்: இஷ்டப்படி உபயோகித்துக்கொள்ளலாம்" என்றார்கள். கிருஷ்ணன், "நீங்கள் எனக்குச் செய்த உபசாரத்தைப் பெற்றுக்கொண்டேன். மிக்க சந்தோஷம்"என்று சொல்லி, அவர்கட்கு விடைகொடுத் தனுப்பினார்.

அவர்கள் போன பிறகு, விதுரர், கிருஷ்ணனை ஸகல வித உபசாரங்களாலும் பூஜித்தார்; பக்ஷ்யபோஜ்யங்களுடனும் ஷட்ரஸங்களுடனும் கூடிய அன்னத்தைத் தந்தார். கிருஷ்ணன் அந்த அன்னத்தைப் பகவானுக்கு நிவேதனஞ் செய்து, பிராமணர்களைப் போஜனஞ் செய்வித்தார்; பிறகு, பிராமணசேஷத்தை அந்த ஸ்ரீகிருஷ்ணன் தமது இஷ்டர்களுடன் போஜனஞ் செய்தார்.

கிருஷ்ணபகவான் சிரமபரிஹாரஞ் செய்து கொண்ட பிறகு, விதுரர் "கிருஷ்ண! நீரோ ஸந்திக்காக வந்திருக்கிறீர்; துரியோதனன் யுத்தத்துக்கே ஸித்தமாயிருக்கிறான். உம்முடைய எண்ணம் நிறைவேறாது. மேலும், ஸபையில் உம்மைக் கட்டிப்போடுவதாகத் துரியோதனன் யத்தனஞ் செய்திருக்கிறான்; ஆகையால், நீர் ஸபைக்குப்போகாமலிருப்பதே நல்லது"என்று சொன்னார்.

கிருஷ்ணபகவான், "விதுர! துரியோதனன் ஸமாதானத்துக்கு வரமாட்டானென்பது எனக்குந் தெரியும். ஆனாலும், ஸந்திக்கு யத்தனஞ்செய்து பலித்தால், எனக்குப் புண்ணியமுண்டு; பலிக்காவிட்டாலும், உலகத்தில் அபவாதம் நீங்கும்" என்று சொல்லி; விதுரர் ஸித்தஞ்செய்த ஹம்ஸதூலிகாதல்பத்தில் ஸுகமாகச் சயனஞ் செய்தார்.

இராத்திரி கழிந்து சூரியன் உதிக்கும் முன்னமே, மங்களவாத்தியங்களின் சத்தத்தைக் கேட்டு, கிருஷ்ணபகவான் எழுந்து சௌசத்தை முடித்து ஸ்நானஞ் செய்து

விட்டு, ஸந்த்யை ஜபம் அக்னிஹோத்ரம் இவற்றை முடித்துக்கொண்டு புறப்படுவதற்குச் சித்தராக இருந்தார். அச்சமயத்தில், துரியோதனன சகுனியை அழைத்துக்கொண்டு கிருஷ்ணனருகில் வந்து, "திருதராஷ்டிரர் பீஷ்மர் மற்றும் அனேக அரசர்கள் ஸபைக்கு வந்திருக்கிறார்கள்; தங்கள் வரவை எதிர்பார்க்கிறார்கள்" என்று சொன்னான்.

கிருஷ்ணன், சைப்யம் ஸுக்ரீவம் மேகபுஷ்பம் வலாஹகம் என்னும் நான்கு குதிரைகள் பூட்டிக் கருடத்துவஜம் அசையப்பெற்ற இரதத்தில் உட்கார்ந்து, திருதராஷ்டிரனுடைய ஸபைக்குப் போய்ச்சேர்ந்தார். அங்கே, விதுரர், பகவானுடைய கையைப்பிடித்து அழைத்து வந்தார். பீஷ்மர் துரோணர் முதலானவர்கள் திருதராஷ்டிரனை முன்னிட்டுக்கொண்டு, கிருஷ்ணனை எதிர்கொண்டழைத்தார்கள். அச்சபையில் உட்கார்ந்த ஆயிரக்கணக்கான அரசர்களும், கிருஷ்ணபகவானைப் பார்த்தவுடன் எழுந்து மரியாதை செய்தார்கள். கிருஷ்ணனுக்காகவே ஏற்படுத்திய ஸுவர்ணஸனத்தில் அவர் உட்கார்ந்தார். அவருடன் வந்த ஸாத்யகி முதலியவர்க்கும் தக்கபடி ஆஸனம் இட்டு, கௌரவர்கள் உட்காரவைத்தார்கள். கர்ணனும் துரியோதனனும் கிருஷ்ணனுக்குக் கொஞ்சம் அருகில் தானே ஏகாஸனத்தில் உட்கார்ந்தார்கள். விதுரர், கிருஷ்ணனுக்கு அதிஸமீபத்தில் ஓர் ஆஸனத்தில் உட்கார்ந்தார். கிருஷ்ணனை இடைவழியிலே தரிசித்த ரிஷிகள் எல்லோரும் அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஸபையிற் பிரவேசித்தார்கள்; அவர்களுக்குப் பகவானுடைய ஸமீபத்தில் ஆஸனங்களிட்டுக் கௌரவர்கள் உட்காரவைத்தார்கள்.

'இனி, கிருஷ்ணன் பேசப்போகிறார்' என்று தெரிந்தவுடன், ஸபை ஒலியடங்கி நிச்சப்தம் ஆயிற்று. கிருஷ்

ணன், மேககர்ஜ்ஜனைபோலவும் துந்துபிவாத்தியத்தின் சப்தம்போலவும் உச்சஸ்வரமாக, திருதராஷ்டிரனைப் பார்த்துப் பேசத் தொடங்கினர்:—"திருதராஷ்டிரரே! கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் உலகத்திலுள்ள வீரர்களுக்கும் நாசம் நேரிடக்கூடா தென்ற அபிப்பிராயத்தால், கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஸமாதானஞ் செய்யவேண்டும் என்று வந்திருக்கிறேன். உங்களுடைய குலம் உலகத்தில் எல்லாராலும் புகழப்பெற்றது; தருமம் தயை தாக்ஷிண்யம் முதலிய ஸகல குணங்களும் பொருந்தியது. அது இப்போது உம்மால் அழிந்துபோவது யுக்த மன்று. துரியோதனன் முதலிய உமது புத்திரர்கள் தருமார்த்தங்களை விட்டு, மரியாதையில்லாமல் லோபத்தையே மேற்கொண்டு கபடமாக நடக்கிறார்கள். அதனால், பூமியிலுள்ள அரசர்க்கெல்லாம் நாசம் நேரிடப்போகிறது. நீர் விரும்பினல் அதை இல்லாமற் செய்யலாம். பாண்டவர்களை நான் அடக்குகிறேன். உமது புத்திரர்களை நீர் அடக்கும். இப்படிச்செய்தால், பாண்டவர்கள் உமக்கே துணையாக இருந்துகொண்டு, சத்துருக்கள் ராஜ்யத்திற் பிரவேசிக்க இடமில்லாமற் செய்வார்கள். மேலும், இதை யறிந்த உமதுசத்துருக்கள் ஸ்வயமாகவே ஸந்திசெய்துகொள்ளுவார்கள். பாண்டவர்கள் ராஜ்யங்களை மேன்மேலும் உமக்குச் சம்பாதித்துக் கொடுப்பார்கள். நீர் உமது புத்திரர்களையும் பாண்டுபுத்திரர்களையும் வைத்துக்கொண்டு ஸுகமாக இருக்கலாம்.

யுத்தம் நேரிட்டாலோ, யாருக்கு நாசம் வந்தாலும், உமக்குச் சுகம் இல்லை. பாண்டவர்கள், உம்முடைய கட்டளைப்படி பன்னிரண்டுவருஷம் வனவாஸமும் ஒருவருஷம் அஞ்ஞாதவாஸமுஞ்செய்து, தங்களுடைய ராஜ்ய

பாகத்தைக் கேட்கிறார்கள். யுதிஷ்டிரர் எப்போதும் தருமத்திலேயே இருப்பவர்; அவருடைய புத்தி அதருமத்தில் ஒருபோதும் செல்லாது. பாண்டவர்கள் தகப்பனுடைய ராஜ்யத்தைக் கேட்கிறார்கள். அதை அவர்களுக்குக் கொடுத்து, யுத்தத்திற்காக வந்த அரசர்களுக்கு விருந்தும் மரியாதையும் செய்து, எல்லோரையும் காயமில்லாமல் விடைகொடுத்தனுப்பும்; பாண்டவர்கள் தங்களுடைய ராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டு, உமக்குப் பணிவிடை செய்யவும், இல்லாவிட்டால் யுத்தஞ் செய்யவும் ஸித்தமாக இருக்கிறார்கள். உமக்கு எது ருசிக்கிறதோ, அதைச் செய்க" என்றார்.

இதைக்கேட்ட அரசர் எல்லோரும் தம் தமது மனத்திற்குள் கிருஷ்ணனுடைய வசனத்தைப் பூஜித்தார்கள்; ஆனால், எவரும் ஒன்றும் பேசவில்லை.

இதைக்கேட்ட பரசுராமர் துரியோதனனைப்பார்த்துச் சொல்லுகிறார்.—"துரியோதன! முன் காலத்தில் தம்போத்பவன் என்று ஒருராஜன் இருந்தான். அவன் மிகவும் கருவங்கொண்டு, தன் ராஜ்யத்திலுள்ள எல்லோரையும்பார்த்து, 'பிரபஞ்சத்திலே என்னைப் போலப் பலிஷ்டன் யாராவது உண்டா?' என்று கேட்பான். அவனுடைய சிட்சைக்குப் பயந்து, 'உன்னைப்போன்ற பலசாலி யாரும் இல்லை' என்று ஜனங்கள் சொல்லுவார்கள். அவன் அப்படியே சில பிராமணர்களைக் கேட்டபோது, அவர்கள், 'கந்தமாதனபருவதத்தில் நரன் நாராயணன் என்று இரண்டு ரிஷிகள் இருக்கிறார்கள். உன் பலம் அவர்களுடைய பலத்திற்கு நூற்றில் ஒருபாகம்கூடக் காணாது' என்றார்கள். இதைக்கேட்ட அரசன் பொறாமை கொண்டு, நரநாராயணர்களிடத்திற் போய்ச் சேர்ந்தான். அவர்கள் அரசனைப் பார்த்தவுடன், அர்க்கிய பாத்தியங்கள் கொடுத்துப் பூஜைசெய்து, 'வந்த காரியம்

என்ன?' என்று கேட்டார்கள். அரசன், "உங்களோடு யுத்தஞ்செய்ய விரும்பி, நான் வந்திருக்கிறேன்" என்றான். அதற்கு, ரிஷிகள், "நாங்கள் தவஞ் செய்கிறவர்கள்; எங்களிடத்தில் ஆயுதம் ஏது? யுத்தம் ஏது? எங்களை நிர்ப்பந்தப்படுத்தாதே. உலகத்தில் எத்தனையோ க்ஷத்திரியர்கள் இருக்கிறார்கள்; அங்கே போ" என்று பலமுறை சொல்லிப் பார்த்தார்கள். என்ன சொல்லியும் அந்த அரசன் கேட்கவில்லை. அவனுடைய நிர்ப்பந்தத்தைத் தாங்கமுடியாமல் நரன் யுத்தத்துக்கு நின்றார். தம்போத்பவன் அநேக பாணங்களையும் அஸ்திரங்களையும் பிரயோகஞ் செய்தான். ரிஷி அவைகள்எல்லாவற்றையும் வீணாக்கிவிட்டு, இஷீகம் என்னும் ஓர்அஸ்திரத்தைப் பிரயோகித்தார். அதனால், பூமியிலும் ஆகாசத்திலும் எல்லாத்திக்கிலும் எங்குப் பார்த்தாலும் பஞ்சுபறந்து வெளுப்பாகத்தோன்றியது. அரசனுடைய கண்ணு மூக்கு காது முதலிய துவாரங்களில் பஞ்சு நிரம்பியது. அரசன் மேலேசெய்வது ஒன்றுந் தெரியாமல் அந்த ரிஷிகளையே சரணமடைந்தான். அப்பொழுது, நரன், "ராஜனே! உன்னைக் கொல்லாமல் எனது தபோபலத்திலே கொஞ்சம் காண்பித்தேன். இதையே உன்னால் தாங்கமுடியவில்லை; ஆகையால், இனி நீ கர்வப்படாதே" என்று புத்திசொல்லி யனுப்பினார். துரியோதனா! அந்த நரன்தான் அர்ஜ்ஜுநனாக அவதரித்திருக்கிறார்; நாராயணன்தான் கிருஷ்ணன்; ஆகையால், இவர்களைப் பகைத்துக்கொள்ளாதே. கிருஷ்ணன் சொல்வதுபோல் ஸமாதானம் அடை" என்று சொன்னார்.

பிறகு, கண்வரிஷி, நாராயணன் கருடனுடைய கருவத்தைப் பரிஹாரஞ்செய்த கதையைச் சொல்லி, "அந்தநாராயணனே கிருஷ்ண னானபடியால், அவருடன் விரோதஞ்

செய்துகொள்ளாதே ; ஸமாதானமடை" என்று சொன்ஞர். அதைக்கேட்டு, துரியோதனன், சிரித்துப் பரிகாசம் செய்து, துடையைத் தட்டிக்கொண்டு, "ஓ ரிஷி! ஈசுவரன் என்னை எப்படிச் சிருஷ்டித்திருக்கிருனே, அப்படியாகிறது. நீர் ஏன் உளறுகிறீர்?" என்ருன். அதைக்கேட்ட கண்வர், கோபமடைந்து, "துரியோதன! துடையைத் தட்டி என்னைப் பரிகாசஞ்செய்தமையால், உனக்குத் துடைவழியால் தான்மரணம் நேரிடப்போகிறது" என்று சபித்தார்.

நாரதர், துரியோதனனை நோக்கி, "பிடிவாதமுடையவர் கஷ்டமடைவார்" என்கிற விஷயத்தில் காலவசரித்திரத்தை விஸ்தாரமாகச் சொல்லி, "கர்வம் பிடிவாதம் குரோதம் இவைகளை விட்டுப் பாண்டவர்களுடன் ஸந்திசெய்துகொள்" என்று சொன்ஞர்.

அதன்பிறகு, திருதராஷ்டிரனுடைய பிரார்த்தனையின் மேல், கிருஷ்ணன், துரியோதனனுக்கு ஹிதம் உபதேசித்துப் பார்த்தார். அதுவும் அவனுக்கு ருசிக்கவில்லை.

பீஷ்மர் துரோணுசாரியர் இருவரும், வேண்டியவளவு பகவானுடைய மகிமையைச் சொல்லி, ஸந்திசெய்துகொள்ளும்படி துர்யோதனனுக்குச் சொன்ஞர்கள். அப்படியே, திருதராஷ்டிரனும் சொன்ஞன்.

இவற்றை எல்லாம் கேட்ட துரியோதனன், ஸ்ரீ கிருஷ்ணபகவானைப்பார்த்துச் சொல்லுகிருன் "கிருஷ்ணு! நீரும் துரோணரும் பீஷ்மரும் திருதராஷ்டிரரும் மற்றைய அரசரும் ரிஷிகளும் என்னையே நிந்திக்கிறீர்கள். அவ்விஷயத்தில் எனக்குக் காரணம் தெரியவில்லை. சகுனியும் யுதிஷ்டிரனும் சூதாடினர்கள்; ஆடத்தெரியாமல் அதில் தோற்றுப்போய்ப் பாண்டவர்கள் வனவாஸம் செய்தார்கள். அதில் என்மேல் என்ன பிழை? ராஜ்யபாகம் என்பீரோ,

கிருஷ்ணா! அவர்களுக்குப் பாகம் ஏது? யார் கொடுத்தார்? நான் சிறுவனாக இருக்கும்பொழுது கண்ணில்லாத என் பிதா கொடுத்ததை நான் ஒப்புக்கொள்ளவில்லை. பாண்டவர்கள் மகாஸமர்த்தர்களென்று பயமுறுத்துகிறீரோ, யுத்தத்தில் இந்திரனைக்கண்டும் நான் பயப்பட்டவனல்லன். பீஷ்மர் கர்ணன் கிருபர் துரோணர் இவர்களைத் தேவர்களாலும் வெல்லமுடியாது. பாண்டவர்கள் ஒரு பொருட்டா? ஒரு சமயம் யுத்தத்தில் நாங்கள் மரணமடைந்தாலும், அது எங்களுக்கு நல்லதுதான். கேசவ! நான் பிழைத்திருக்கும் வரையில், ஊசிமுனையால் குத்தும் பூமியும் பாண்டவர்களுக்குக் கிடைக்கும் என்று எண்ண வேண்டாம்.''

கிருஷ்ணன், அந்தவார்த்தையைக் கேட்டுச் சிரித்து, ''துரியோதனா! நீ சொன்னதில் ஒன்று ஸத்தியம் தான். யுத்தத்தில் வீரசயனம் அடையத்தான் போகிறாய். உன்னுடைய மந்திரிகள் பிராதாக்கள் முதலானவர்களோடு மரணத்துக்கு ஸித்தமாக இரு. என்மேல் யாதொரு பிசகும் இல்லை என்று சொல்லுகிறாயே, அதற்குப் பதில் சொல்லுகிறேன், கேள். பீமஸேனனைப் பாம்புகளாலும் விஷத்தாலும் கொல்ல யத்தனஞ் செய்தது, பாண்டவர்களைக் குந்தீதேவியோடுகூட அரக்குமாளிகையில் கொளுத்த யத்தனம் செய்தது, சூதாடினது, திரௌபதியை ஸபைக்கு அழைத்து அவளை அவமானப்படுத்த முயன்றது, இவைகளெல்லாம் துரியோதனா! அபராதமல்லவே? இவைகளெல்லாம் உன் விநாசத்துக்கே காரணமானவை'' என்றார்.

கிருஷ்ணன் இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போது, துச்சாசனன் ''அண்ணா! உமக்குத் தெரியுமா ஸமாசாரம்? நீர் ஸமாதானத்தை ஒப்புக்கொண்டு பாதிராஜ்யத்தைப் பாண்டவர்களுக்குக் கொடுத்துவிடும் ; இல்லாவிட்

டால், உம்மையும் என்னையும் கர்ணனையும் கட்டி, பீஷ்மரும் துரோணரும் நமது பிதாவும் பாண்டவர்களுக்குக் கொடுக்கப்போகிருர்கள்'' என்று பரிகாசமாகச் சொன்ஞன். அதைக் கேட்டவுடன், துரியோதனன், அந்தச் சபையிலிருந்த எல்லோரையும் அவமதித்துவிட்டு, ஸபையிலிருந்து வெளியே போய் விட்டான். அவன் வெளியே போகும்போது, அவனுடைய பிராதாக்களும் அவனுடனே போய் விட்டார்கள்.

பீஷ்மர், துரியோதனன் கேட்டுக்கொண்டிருக்கும் பொழுது, கிருஷ்ணனைப் பார்த்து இவ்வாறு கூறினார்: "கிருஷ்ணு! திருதராஷ்டிரனுடையபுத்திரனாகிய துரியோதனன் துராத்துமா; குரோதத்தையும் லோபத்தையுந்தான் அனுசரித்தவன்; சத்துருக்கள் ஸந்தோஷப்படுங் கார்யத்தையே செய்கிருன்; ஆகையால், இவர் எல்லோரும் காலத்துக்குச் சுவாதீனமாயிருக்கிருர்கள் என்று எண்ணுகிறேன்.''

கிருஷ்ணன், "துச்சாசனன் பரிகாசமாகச் சொன்னதை நிஜமாகச் செய்து, துரியோதனன் துச்சாஸனன் கர்ணன் சகுனி இவர்களைக் கட்டிப் பாண்டவர்களுடைய வசம் கொடுத்து விடுங்கள்''என்று சொன்ஞர்.

பிறகு, திருதராஷ்டிரன், தன் மனைவியாகிய காந்தாரியைச் சபைக்கு வரவழைத்தான்; அவள் வந்தவுடன், அவளைப்பார்த்து, "துரியோதனன், கிருஷ்ணன்முதலானவர்களுடைய வார்த்தையைக் கேட்கவில்லை. எல்லோரும் உட்கார்ந்திருக்கும் போது வெளியே போய்விட்டான். ஆகையால், அவனை நீ வரவழைத்துப் புத்தி சொல்லு என்ருன்.

காந்தாரியும் துரியோதனனை வரவழைத்துப் புத்தி சொல்லியும், துரியோதனன், கேளாமல், வெளியிற் போய்,

துச்சாசனன் கர்ணன் சகுனி இவர்களுடன் ஆலோசித்து, கிருஷ்ணனைக்கட்டிச் சிறையில் போட்டுவிடுவதாக நிச்சயித்தான்; இதையறிந்த திருதராஷ்டிரன் துரியோதனனை மறுபடியும் அழைத்து, "நீ எண்ணின காரியம் முடியாது" என்று சொன்னான்.

அச்சமயத்தில், பகவான், துரியோதனனைப் பார்த்து, "நான் ஒருவனாக இருக்கிறேனென்று எண்ணாதே, பார்" என்றார். அப்போது அவருடைய தேகத்தினின்றும், நெருப்பிலிருந்து ஜ்வாலைகள் கிளம்புவதுபோல், பிரமா ருத்திரர் லோகபாலர் ஆதித்தியர் அஷ்டவஸுக்கள் அசுவினீதேவர் ஸாத்தியர் மருத்துக்கள் விசுவேதேவர்கள் கந்தர்வர் ராக்ஷஸர் யக்ஷர் கின்னரர் பாண்டவர்கள் விருஷ்ணிகள் இவர்களும், மேல் ஏழு லோகத்திலும் கீழ் ஏழுலோகத்திலும் உள்ள ஜனங்களும் ஸமுத்திரங்களும், நதிகளும் தோன்றினர். இதுவரையிற் பாராத அபூர்வமான பகவானுடைய விசுவரூபத்தைப் பார்த்து, துரோணர் பீஷ்மர் விதுரர் ஸஞ்ஜயன் முதலிய சில பெரியோரையும் மகர்ஷிகளையும் தவிர மற்ற ஸகல ஜனங்களும் கண்கூச்சம் அடைந்து, கண்களை மூடிக்கொண்டார்கள். தெவர் கின்னரர் கந்தர்வர் லோகபாலர் ரிஷிகள் முதலியவர் கிருஷ்ணனை நமஸ்கரித்து, இப்படித் துதித்தார்கள். "பிரபுவே! உம்முடைய கோபத்தை அடக்கும். இந்த ரூபத்தைப்பார்த்தால், ஸகல லோகமும் நாசம் அடையும். நீர்தான் சிருஷ்டிகர்த்தா. அழிக்கிறவரும் நீர்தான். இவ்வுலகம் உம்மால் காப்பாற்றப் படுகிறது. இந்த அரசர் உமக்கு ஒரு லக்ஷ்யமா? இவர்களுக்காக இந்தத் திவ்வியரூபத்தைக் காட்டவேண்டுமா? இந்த ரூபத்தை அடக்கும்" என்றார்கள். அந்தஆச்சரியத்தைப் பார்க்கத் திருதராஷ்டிரன் விரும்பின படியால்,

அவனுக்குப் பகவான் அப்போது திவ்விய சக்ஷுஸ்ஸைக் கொடுத்தார். திருதராஷ்டிரன் கொஞ்சநேரம் பார்த்துப் பகவானை ஸ்தோத்திரஞ் செய்து, "உம்மைப் பார்த்த கண்ணால் வேறு பதார்த்தங்களைப் பார்க்கமாட்டேன்; என் திருஷ்டியை மறைத்துவிடும்" என்று பிரார்த்தித்தான். பகவானுடைய இச்சையால் அவனுடைய கண்கள் மறைந்தன. எல்லாருடைய பிரார்த்தனையின்மேல் கிருஷ்ண பகவான் தமது விசுவரூபத்தை மறைத்துவிட்டார். ரிஷிகள் கிருஷ்ணனிடத்தில் விடைபெற்று மறைந்துவிட்டார்கள்.

பிறகு, கிருஷ்ணபகவான், பீஷ்மர் துரோணர் கிருபர் திருதராஷ்டிரர் முதலானவர்களிடத்தில் விடை பெற்றுக் கொண்டு, குந்தியினிடத்திலே ஸபையில் நடந்த வரலாற்றையெல்லாம் சொல்லி, அவள் பாண்டவர்களுக்குச் சொன்ன ஸமாசாரங்களையும் கேட்டுக்கொண்டு, விதுரருடைய வீட்டுக்குப்போய்ப் போஜனஞ்செய்து விட்டு, பரிவாரங்களுடன் மறுபடியும் உபப்பிலாவியத்துக்கு வந்து சேர்ந்தார்.

பின்பு, பாண்டவர்கள்,போர் புரிவதாகத் தீர்மானித்து, சிநேகிதர்களெல்லாம் தமது சேனைகளோடு உதவி செய்யக் குருக்ஷேத்திரத்தில் யுத்தஞ்செய்து, கிருஷ்ணஸஹாயத்தால் துரியோதனாதியரை யெல்லாம்போர்க்களத்தில் நாசஞ்செய்து வெற்றிபெற்று, தமது முன்னோராண்ட ராஜ்யத்தை நிஷ்கண்டகமாக வெகுகாலம் ஆண்டுவாழ்ந்தனர்.

விதுரநீதி முற்றிற்று.

---

Commercial Press, Madras. S. E.